# மின்னலடிக்கும் ஸுப்பர் ரின் வெண்மை...

**...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.**

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸுப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸுப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸுப்பர் ரின்.




**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுவித டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸுப்பர் ரின்

அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸுப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.40-2012 TM

# பட்டத்தில் பறக்கலாம்!

மனிதன் எது எதற்கோ பறக்கிறான்—வேலைக்கு, சாப்பாட்டுக்கு அட்மிஷனுக்கு—

படத்தில் பார்க்கிறீர்களே, அவர் பறப்பதற்காகவே பறக்கிறார்! தொங்கியபடியே பறக்கும் இதுவும் ஒரு விளையாட்டுத்தான். 'ஹாங் கிளைடிங்' என்கிறார்கள் இதை.

பூனா மிலிடரி இன்ஜினீயரிங் கல்லூரியைச் சேர்ந்த மேஜர் விவேக் மண்ட்ரூர் அவர்களைச் சந்திக்க ஐந்து வருடங்களுக்கு முன் அவர் உறவினர் ஒருவர் அமெரிக்காவிலிருந்து வந்தார். வந்த இளைஞர் ஒரு 'ஹாங் கிளைடர்'. மேஜருக்குப் பிடித்துக் கொண்டது ஆசை. ஆரம்பத்தில் தனியே இந்தப் பட்டத்தைச் செய்து பறந்து பார்த்தார். (நண்பர்கள் பயந்துபோய் முதலுதவிப் பெட்டியுடன் அவர் இறங்கும் இடத்தில் காத்துக் கொண்டிருந்தார்களாம் கவலையுடன்!) இந்தப் புதிய விளையாட்டில் ஆர்வம் மிகுந்த லெப்டினன்ட் ஜெனரல் எஸ். என். சர்மா இவரை இரண்டு மாத விசேஷப் பயிற்சி பெற வெளி நாட்டுக்கு அனுப்பிவைத்து, சௌத் வேல்ஸில்மைக் ஆடம் என்பவரிடம் கற்கச் செய்தாராம்.

அலுமினியத்தினால் ஆன சட்டத்தில் டைற டென்ஸிடி பாலிதின் பிளாஸ்டிக் துணியைப் பட்டம் போல் பரப்பி மூலைகளில் பொருத்தியிருக்கிறார்கள். ஊஞ்சல் போன்ற அமைப்பில் தூளியில் உட்காருவது போல் அமர்கிறார் பறக்கிறவர். மேலே போக வேண்டுமா? முன்னால் இருக்கும் பிடியை அழுத்தமாக முன்னால் தள்ள வேண்டும். கீழே இறங்க வேண்டுமா? பிடியைப் பின்னால் இழுக்க வேண்டுமாம். சுமார் முப்பதடி உயரத்தில் இதைக் கொண்டு போய் அங்கிருந்து ஆகாயத்தில் தாவி, மெல்லப் பறந்து கீழே தரையில் இறங்கலாம். பெட்ரோல் செலவில்லை. இன்ஜின் தேவையில்லை! காற்றின் சக்தியில் பறக்கிறது ஹாங் கிளைடர் பட்டம்.

பஸ் கட்டணங்களைக் கூட்டி விட்டார்களே இப்படி ஒரு பட்டம் இருந்தால் பல்லவன் தயவு தேவையில்லையே என்கிறீர்களா? பட்டணத்தில் ஜன நெரிசல் மிக்க இடங்களில் பறக்க அனுமதிக்க மாட்டார்கள். விலை கட்டுபடியாகுமா என்பதும் சந்தேகம்தான். பூனாவில் இருக்கும் கிளைடிங் கிளப் இதை விற்பனைக்குக் கொண்டு வரும் பட்சத்தில் இதன் விலை ஐயாயிரம் ரூபாயாக இருக்கலாம். பயிற்சிக்காக வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்தார்கள் மூன்று கிளைடர்களை. விலை—ஒவ்வொன்றும் ரூ. 50,000!

சினிமாவில் – ஒற்றர் கதைகளில் பிரபலமடைந்து வருகிறது ஹாங் கிளைடர்.

கடைசி செய்தி: ஸ்ரீநகரிலிருந்து ஸ்ரீலங்கா வரை ஹாங் கிளைடரில் பறக்கப் போகிறேன் என்று சவால் விட்டிருக்கிறார் ஒருவர்!

தகவல்: சாருகேசி

படங்கள், நன்றி: MID DAY



⌘ ஹாங் கிளைடரில் திலீப் சக்கரவர்த்தி

⌘ மேஜர் விவேக் மண்ட்ரூர் (வலதுபுறம் கறுப்புக் கண்ணாடி அணிந்து)




இந்தியா.. இந்தியா.. இந்தியா..
இந்தியா.. இந்தியா.. இந்திரா..
இந்திரா.. இந்திரா.. இந்திரா..


இந்தியா.. இந்தியா.. இந்தியா..
இந்தியா.. இந்தியா.. இந்தியா..
இந்தியா.. இந்தியா.. இந்தியா..






கழிக்க மாட்டோம்!
கழிக்க மாட்டோம்!




கழிக்க மாட்டோம்!..
கழிக்க மாட்டோம்!

# ராஜீவ்

பிரதமரின் மகன் தோல்வி அடைந்திருந்தால் அது பரபரப்பான செய்தியாகி யிருக்கும். வெற்றி பெற்றதில் வியப்பேதும் இல்லை. எல்லோரும் எதிர் பார்த்தது நடந்திருக்கிறது. அவ்வளவுதான்.

பிரதமர் அமேதி பக்கம் எட்டிப் பார்த்துக்கூட இருக்க வேண்டாம்; சஞ்சய்யை எண்ணி, பாவம், கண்ணீர் உகுத்திருக்க வேண்டாம்: ராஜீவின் அரசியல் பிரவேசத்துக்கு நியாயம் கற்பித்து உருக்கமாகப் பேசியிருக்கவும் வேண்டாம்.

இதெல்லாம் இல்லாமலே ராஜீவ் வெற்றி பெற்றிருப்பார், நிச்சயம். மோதிலால் நேருவின் கொள்ளுப்பேரன், நேருஜியின்பேரன், இந்திராவின் மகன் என்ற தகுதிகளே போதும்; நமது மக்கள் நன்றி உணர்வோடும் பெருமித பூரிப்போடும் வோட்டுப் போடுவார்கள். மேலும் எதிர்க்கட்சியினர் அவிழ்த்துவிட்ட நெல்லிக்காய் மூட்டையாகச் சிதறிக் கிடக்கும்போது ராஜீவின் வெற்றியை மாபெரும் சாதனை என வர்ணிப்பதற்கில்லை.

அவரது வெற்றிகள் இனிமேல்தான் ஆரம்பமாக வேண்டும். அந்த வெற்றிகள் பிரதிபலன் எதிர்பாராத மக்கள் சேவையாக விளங்கப் போகின்றனவா அல்லது சர்வாதிகாரப் போக்கின் மறுமலர்ச்சியாகத் திகழப் போகின்றனவா என்று பார்க்க வேண்டும்.

தம்மைத் தேர்ந்தெடுத்த தொகுதி மக்களுக்கு உதவுவதே அவரது முதல் பணி. எனவே, அவர்களது ''நல்வாழ்வுக்கு உழைப்பேன்'' என்று வெற்றி பெற்றதும் பத்திரிகை நிருபர்களிடம் ராஜீவ் கூறியதை வரவேற்கலாம். இதற்கும் மேலே நாடளாவிய அளவிலும் அவர் மக்கள் பணியாற்ற முடியும். குடும்பக் கட்டுப்பாடு திட்டம் அமலாகவும், வரதட்சிணைக் கொடுமை ஒழியவும், மரங்கள் வளர்க்கவும், வேலை நிறுத்தங்களுக்கு முடிவு கட்டவும், உழைப்பார்வம் பெருகவும், செய்நேர்த்தி சிறக்கவும், உற்பத்தி பெருகவும் மக்களிடையே தமது செல்வாக்கைப் பயன்படுத்தி அவர் உழைக்கலாம். அதிகாரத்தினால் அன்றி அன்பினால் இவற்றைச் சாதிக்கலாம். ஆனால் இப்படி நடக்கப் போகிறதா என்பது கேள்விக் குறியாகி விட்டது!

நிருபர்களிடம், ''கட்சியில் பதவி ஏதும் வகிக்கமாட்டேன்'' என்று சொன்னவர், ''கட்சியில் உட்பூசல்கள் நிரம்ப உள்ளன; அவற்றை எப்படித் தீர்த்து வைக்கலாம் என்று கவனிக்க வேண்டும்'' என்று கூறியபோதும்,

''அரசாங்கத்தில் பதவி ஏதும் ஏற்க மாட்டேன்'' என்று சொன்னவர், ''என் தாயாருக்கு எப்படி உதவலாம் என்று யோசிக்கிறேன்'' என்று கூறிய போதும்,

இடிக்கிறது.

'இந்திரா காங்கிரஸுக்குள் எந்த மாநிலத்தில் என்ன உட்பூசல் இருந்தாலும் சரி, என்னிடம் வாருங்கள், நான் கூறுகிற தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று அர்த்தம் பண்ணிக்கொண்டு அதன்படி இ. காங்கிரஸ்காரர்கள் அனைவரும் நடந்து கொண்டால் வியப்பேயில்லை.

தம் தாயாருக்கு எப்படி உதவப்போகிறார் ராஜீவ்? வீட்டுக் காரியங்களைக் கவனிப்பதற்கும் பிரதம மந்திரியின் செக்ரடேரியட்டில் பணிகளை நிறைவேற்றி வைப்பதற்கும் ஏகப்பட்ட ஊழியர்கள் இருக்கிறார்கள். ராஜீவ் செய்யக்கூடியது ஏதுமில்லை. அவர் சொல்வதற்கு உள் அர்த்தம் ஒன்றே. அது, ''பிரதமர் எந்தப் பிரச்சினையிலும் முடிவு எடுக்க நான் உதவப்போகிறேன்'' என்பதுதான். பிரதமரும் நாளடைவில் எந்தப் பிரச்சினையானாலும் 'முதலில் ராஜீவிடம் பேசிவிட்டு அவன் கருத்து அறிந்து வா' என்று அரசு அதிகாரிகளிடமும் கட்சித் தலைவர்களிடமும் கூறுவார் என எதிர்பார்க்கலாம்,

ஆக மொத்தம், சஞ்சய் காலத்தில் நடந்தது போலவே அரசாங்கத்துக்கு மேம்பட்ட ஒரு அதிகார கேந்திரம் ராஜீவைச் சுற்றி உருவாகும். ஃபைல்கள் அவர்

1981 ஜூன் 28

துன்மதி ஆனி 14

மலர்: 39 இதழ்: 48



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

பார்வைக்குப் போகும். அதிகார பலம் இருக்கும்; அதை யொட்டிய பொறுப்புக்கள் ஏதும் இராது. வசதி, ரொம்ப வசதி!

இந்த ஆசைக்கு அடிமையாகாமல் ராஜீவ் தப்பவேண்டும்; சர்வாதிகாரப் போக்கிலிருந்து தம்மையும் காத்துக்கொண்டு தேசத்தையும் காக்க வேண்டும் என்பதே நமது பிரார்த்தனை.

---

# நியூஸ் ஜூஸ்

திருப்பதியிலிருந்து கிளம்பிய விமானத்தில் பயணப்பட்ட 22 பேரும் கடும் புயலில் சிக்குண்டு நேராக வைகுண்ட பதவியை அடையாமல் பைலட் பிரகாஷ் ராவின் திறமையால் தப்பினார்கள். விமானம் சேதமுற்றாலும் பயணிகளுக்கு அதிர்ஷ்டம் இருந்தது; ஏழுமலையான் அருளும் இருந்தது.

திருப்பதி விமான நிலையத்தில் வானிலை பற்றி பைலட்டுக்குத் தேவையான எல்லாத் தகவல்களையும்தரப் போதியவசதிகள் இல்லை. திருப்பதியில் மட்டுமின்றி நாக்பூர், ஜெய்பூர், பெங்களூர் போன்ற வேறு பல விமான நிலையங்களும் மிக நவீன விமானங்களை ஏற்கும் அளவுக்கு நவீனமடையவில்லை. விமானங்களை அவ்வப்போது பழுது பார்த்துச் சீராக வைப்பதிலும் கவனக் குறைவு. இந்தச் சூழ்நிலை, விமான பைலட்டுக்கும், பயணிகளுக்கும், மிக மோசமான வானிலையை விட ஆபத்தானது.

● அகில இந்திய ரேடியோவில் மண்டலம் முழுவதற்கும் நிகழ்ச்சி தயாரிப்பாளராக உயர் பதவி வகித்து வந்த மீ. ப. சோமு, அண்மையில் 'ஓய்வு' பெற்றார்.

பழந்தமிழ் இலக்கியப் புலமை என்னும் அஸ்திவாரத்தின் மீது நவீன இலக்கிய கோபுரம் எழுப்பி பல விருதுகளையும் பரிசுகளையும் பெற்றவர் சோமு. கலைக் குடும்பத்தில் பிறந்து, கலைகள் பல பயின்று, கலைஞர்களுடன் பழகியதால் தமிழ்க் கலைகள் அனைத்தையும் பற்றி ஆழ்ந்த ஞானம் உள்ளவர். உயர்ந்த பண்பாடு அவர் பிறவியிலேயே பெற்றது எனில் அதனை மேலும் அழகுறச் செய்தவர் ரசிகமணி டி. கே. சி; அதற்கு மெருகேற்றின சோமுவின் பல்மொழி அறிவும் படிப்பும் ஆராய்ச்சியும். கலைகள், பண்பாடு, இலக்கியம் ஆகிய அனைத்திலும் இறை உணர்வை இணைத்திருப்பதே தமிழனின் தனிப் பெருமை என்பதை உணர்ந்து வலியுறுத்தும் ஆத்திகர் மீ. ப. சோமு.

மீ.ப.சோமு ▷

ஓய்ச்சல் ஒழிவில்லாத நாட்களாக அவரது ஓய்வு காலம் விளங்கட்டும்; தமிழகம் பயன் பெறட்டும்.

ரூபாயின் மதிப்பு தபதப வென்று விழுந்து இன்று 23 பைசாவில் நிற்கிறது. நாளை மேலும் சரியும்!

விலைவாசி புள்ளியோ ஒரே மாதத்தில் ஏழு பாயிண்ட் அதிகரித்துள்ளது!

பிரதமரோ, ''விலைவாசி உயர்வுக்கு ஜனதா அரசுதான் காரணம்'' என்று அண்மையில் தேர்தல் பிரசாரம் செய்தார்.

பாமர மக்களை ஏமாற்றலாம்; ஆனால் படித்தவர்களிடையே ரூபாயின் மதிப்பை விட இ. காங்கிரஸ் ஆட்சியின் மதிப்பு வேகமாக விழுந்து கொண்டிருக்கிறது!

● அமெரிக்காவில் நிர்வாண நடனத்தைத் தடை செய்ய முடியாது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வழங்கி விட்டது.

உடனே இங்குள்ள 'ஃப்ரீ செக்ஸ்' வீரர்கள் ''பார்த்தீர்களா! நம்மிடம்தான் ஹிப்பாக்ரஸி மூட்டை மூட்டையாக இருக்கிறது'' என்று புலம்புவார்கள்.

அமெரிக்க மக்களின் சுதந்திர ஆர்வம் மிக அதிகம்; அமெரிக்க அரசியல் சாசனம் மக்களுக்கு வழங்கும் சுதந்திரங்களும் மிகவும் அதிகம். சாசனம் அளிக்கும் சுதந்திரங்களை மக்களுக்குக் காத்துத் தருவதில் நீதிமன்றங்களுக்கு உள்ள அக்கறையும் மிக அதிகம். சுதந்திரத்தைக் காக்கும் பணியில் சில அநாகரிகங்களுக்கு அவர்கள் இடம் தந்தாலும் தருவார்களே தவிர, அந்த அநாகரிகங்களைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதற்காக மக்களின் சுதந்திரங்கள் மீது கைவைக்க மாட்டார்கள்.

சுப்ரீம் கோர்ட் அரசியல் சாசனத்துக்குக் கட்டுப்பட்டு வேறு வழியின்றி நிர்வாண நடனத்துக்குத் தடை விதிக்காமல் இருக்கலாம். ஆனால் அது அல்ல முக்கிய விஷயம். இத்தகைய ஆபாசங்கள் சமுதாயத்துக்குக் கேடு விளைவிக்கின்றன என்று உணர்ந்து, கண்ணே போல் போற்றும் சுதந்திரங்கள் கட்டுப் படுத்தப்பட்டாலும் பாதகமில்லை என்று கருதி நீதிமன்றத்துக்குப் போயிருக்கிறார்களே அமெரிக்க மக்கள், அதைத்தான் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**You've appreciated the MERCURY quality...**

# NOW TRY MERCURY KINGS

**smoother, non breaking, longer-lasting, write darker.**

Because MERCURY KINGS are pencils with especially Bonded and Reinforced lead. With the famous MPF hallmark.

**The Madras Pencil Factory**
15, Stringers Street,
Madras 600 001.

*MAKERS OF BETTER PENCILS*




ADWAVE/MPF/1619 D



# லியோ காபி

## 10-வது ஆண்டு நிறைவு விழாவை (24-6-81) முன்னிட்டு எங்கள் அன்பார்ந்த வாடிக்கையாளர்களுக்கு



எங்கள் கிளைகளில், **4** கிலோ காபி பவுடர் வாங்கியதற்கான பில்களை சேர்த்துக் கொடுப்பவர்களுக்கு ஜூன் மாதம் **15**-ம் தேதி முதல் ஆகஸ்ட் மாதம் **15**-ம் தேதி வரை தற்போது வழங்கும் துணிப்பையுடன் **கப் & சாஸர்** அன்பளிப்பாக வழங்குகிறோம். அனைவரும் தொடர்ந்து நல்லாதரவு தர அன்புடன் வேண்டுகிறோம்.



**லியோ காபி**

நிர்வாக அலுவலகம்: 16, தெற்குமாட வீதி,
மைலாப்பூர், சென்னை-4. போன்: 76557 & 76912



கிளைகள்:- மைலாப்பூர், தி. நகர், ஜாம்பஜார், திருவல்லிக்கேணி, வண்ணாரப்பேட்டை புரசைவாக்கம், அமைந்தகரை, சைதாப்பேட்டை, அயனாவரம், ஜார்ஜ்டவுன், பெரம்பூர், அடையாறு, நுங்கம்பாக்கம், N.S.C. போஸ்ரோடு, தாம்பரம்



# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

The kings of these countries have weakened themselves by their mutual treasons and drained the source of their wealth by a tyranny, of which nothing can give you an idea-
-ANDRE FREIRE

### 13

தோதாவும் ட்ரேக்ராஜரும் பழக்கமானவர்கள். அடிக்கடி ரங்கப்பா மாளிகையில் சந்தித்திருக்கிறார்கள். அவனும் ராஜரும்,



அர்கனனும் நாராயணவனம் அருகில் இருக்கும் கைலாச கோனே நீர்வீழ்ச்சிக்குப் பலமுறை போயிருக்கிறார்கள். அருவியில் குளித்து விளையாடியிருக்கிறார்கள்.

அன்று இரவு தீவர்த்திகளோடு வரும் யாத்திரைக் கும்பல் யாருடையதாக இருக்கும் என்று பார்க்கப் போக,

ராஜருக்கு அந்தப் பேராச்சரியம் காத்துக் கிடந்தது.

பல்லக்கில் தோதாவைப் பார்த்ததும் ''தோதா!'' என்று கூப்பிட்டு எங்கே போகிறாய் என்று கேட்காமல் ''தூரமா?'' என்று கேட்டான்.

தோதா உடனே தனது சகல பரிவாரங்களையும் நிறுத்திவிட்டான்.

இருவரும் தங்கள் தங்கள் பயணங்களின் நோக்கங்களை விவரிக்க, ஒருவர் சுவர்ணமுகியைத் தேடிப் போவதையும், ஒருவர் சுவர்ணமுகியை அழைத்து வருவதையும் மிகக் குதூகலத்தோடு பரிமாறிக் கொண்டார்கள்.

''நல்ல வேளை! எனக்குப் பெரிய பாரத்தை நீக்கினாய். உங்கள் நாட்டு இளவரசியை உன்னிடமே ஒப்படைத்துவிடுகிறேன். என் கவலை நீங்கிற்று'' என்றான் ராஜர்.

தோதாவுக்கு ஒரு மடங்கு சந்தோஷம் அல்ல. உலகம் முழுவதுமாகச் சேர்ந்து ஒரு மகிழ்ச்சி பொங்கியிருந்தது.

''இது போன்ற தெய்வ அநுகூலம் கிடைக்குமா ராஜர்! தேடிப் போனது நம் எதிரிலேயேவருகிறது'' என்று தெய்வத்தைச் சிலாகித்துப் பேசினான் தோதா.

இருவரும் சத்திரத்துக்குள் செல்ல, ''சுவர்ணமுகி'' என்று அழைத்தான் ராஜர்.

சுவர்ணமுகி இருட்டிலிருந்து தங்க தீபம் போல் வெளிவர, அவளைக் கண்டு தோதா ஒரு புன்னகையைச் சிற விட்டான்.

''சுவர்ணமுகி! எனக்கு மகிழ்ச்சியாகவும் இருக்கிறது, சோகமாகவும் இருக்கிறது. இறை

வன் நமக்கு இவ்வளவு சோதனை செய்து விட்டாரே! இது அடுக்குமா? ரங்கப்பா கடைசிவரை தங்களைத் தான் நினைவு வைத்துக் கொண்டிருந்தார்'' என்று உருகினாற் போலக் கூறினான்.

சுவர்ணமுகி, சோகத்தோடு பெருமூச்சு விட்டு, ''தந்தை இறந்தபோது பக்கத்தில் இருந்தீர்களா?'' என்றாள்.

''ஆமாம்! கடைசி நேர தாகத்துக்குக்கூட இந்தப் பாவிதான் தண்ணீர் வார்த்தான்!'' என்றான்.

''அவர் என்ன சொன்னார்?''

''தாம் இறக்கப் போகிறோம் என்று நிச்சயமாகத் தெரிந்த பிறகுதான் தாங்கள் இன்னார் என்று எங்களிடம் சொன்னார்.''

''எங்களிடம் என்றால் யார் யார்?''

''என்னிடமும் அர்ச்சுனனிடமும்.''

''அர்ச்சுனன் என்ன ஆனார்?'' என்று வேண்டுமென்றே கேள்வியைக் கேட்டாள் அவள். அவளுக்கு ஓர் ஆவல்!

''வழியில் இறந்து விட்டான்!''

''இறந்து விட்டாரா?'' விழிகளைப் பெரிதாக்கி சுவர்ணமுகி கேட்டாள். குரலில் ஒரு தவிப்பு புலப்பட்டது.

''ஆமாம். என் கண்ணால் பார்த்தேன். தங்களை வழியில் பார்த்து அனுப்பியதாகவும் சொன்னான்!''

''ஆமாம், பார்த்தார். அவருக்கு நீங்கள் உதவி செய்யவில்லையா?''

''என்ன செய்ய முடியும்? முதுகில் காயம், முட்டில் காயம்! வயிற்றில் காயம்! எப்படிப் பிழைப்பான்? என் கண் முன்னாலேயே இறந்தான் என் ஆருயிர் நண்பன்.''

''அடக்கம் செய்தீர்களா?''

''இந்தப் பாவக் கையால் செய்து விட்டுத் தான் வருகிறேன் இளவரசி! தங்கள் பூர்வகதையெல்லாம் எங்களுக்குத் தெரிந்து விட்டது. இனி தங்களை இந்த நாட்டுக்கு ராணியாக ஆக்குவது எங்கள் கடமை. அதற்கான தருணம் வரும்வரை நான் உங்களைக் காப்பாற்றுவேன். வாருங்கள். நானே டங்களை வெங்கடலிரிக்குக் கொண்டுவிடுகிறேன்'' என்றான்.

சுவர்ணமுகி அவன் சொன்னதை அதிகம் கேட்கவில்லை. அவள் கண் முன்னால் அர்ச்சுனன் அந்த முள் மரங்களின் பின்னணியில் சூடு தெறிக்கும் வெட்ட வெளியில், புழுதியும் ரத்தமும் மெழுகிய மேல் சட்டையுடன் கிடந்தது நினைவுக்கு வந்தது.

என்ன கம்பீரமான முகம்!

என்ன விசால விழிகள்!

மரணத்தை ஏற்றுக்கொள்வதில் எவ்வளவு அனாயாசம்!

வந்து, நின்று, பேசிய சில விநாடிகளில் ஒரு மாபெரும்வீரனின் இலக்கணத்தை முழுதும் விண்டு காண்பித்து விட்டானே!

அவன் பிழைத்திருக்கக் கூடாதா?

''தோதா! இளவரசியை நாட்டின் ராணியாக்கும் எண்ணம் உண்டா?'' என்று இடையில் பரவிக் கேட்டான் ராஜர்.




''என்னைக் கல்யாணக் கோலத்தில்
பார்க்க ஆசைப்பட்டீர்களே
அப்பா!
ஒவ்வொரு வீட்டுக் கல்யாணத்
திலும்
கோலமிட்டுக்கொண்டிருக்கிறேன்!
என் கோலத்தைப் பாருங்கள்
அப்பா!'' -ஹனுமந்தன்.

''ஏன் இல்லாமல்? ரங்கப்பாவுக்குச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறோமே!'' என்ற தோதா, ''அது ஒரு நாள் நிறைவேறியே தீரும். பதினைந்து வருஷமாகப் பதவிப் போர் நடக்கிறதே! இனியாவது அது முடிய வேண்டாமா?'' என்றான் ஆதங்கத்துடன்.

''உங்கள் குடும்பப் போர் முடிந்து இந்த இளவரசி இந்நாட்டு ராணி ஆனால், நான் என் நாடு செல்லும் ஆசையையே விட்டு விடுவேன். இங்கேயே ஒரு போர்த் தளபதியாக வாழ்வேன்'' என்றான் ராஜர்.

கவர்ணமுகி அப்பொழுது ஆழமான கனவிலிருந்து கழன்று வந்து அவர்கள் சம்பாஷணையில் கலந்து கொண்டாள்.

பழசையும் புதிசையும் நிறையப் பேசி நிம்மதியாக உணவு உண்டு இரவில் எந்தக் கவலையும் இல்லாமல் உறங்கினார்கள் அவர்கள்.

**கா**லையில் தோதா கோஷ்டியுடன் கவர்ணமுகி புறப்பட, வாசலில் ட்ரேக் ராஜர் கலக்கமுடன் நின்றான்.

சில நாட்களில் பழகியதில் அவன் மனத்தில் இளவரசி மீது ஒரு விசித்திரமான பிணைப்பு விழுந்து விட்டது.

அதை அன்பா, சிநேகமா, நட்பா என்று வகைப்படுத்திக் கூற முடியவில்லை.

அவளைப் பார்க்கும்போதெல்லாம் எஸ்மரல்டா நினைவு வந்தது.

இந்த இளவரசியின் புன்னகைக்காகப்பாடுபடவேண்டும். இவளுக்கு எந்தவிதத் தீங்கும் வராமல் பாதுகாக்க வேண்டும்! அவள் மகிழ்ச்சியையே எப்போதும் விரும்ப வேண்டும்! இப்படித்தான் நினைவுகள் தொடர்ச்சியாக வந்தன.

இப்போது இளவரசி பிரியும்போது, எஸ்மரல்டா கப்பலின் ஏணிப் படியில் நின்று அவன் கையை ஒரே அழுத்தாக அழுத்தினது நினைவு வந்தது.

''இளவரசி! உன்னை நான் மறக்க மாட்டேன். சந்தர்ப்பம் ஏற்பட்டால் பின்னால் சந்திக்கவும் செய்வேன்!'' என்றான்.

கவர்ணமுகியின் கண்கள் கலங்கின. ''நீங்கள் இனிமேல் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்றாள்.

''மீண்டும் என் வியாபாரத்தைத் துவக்குவேன். இழந்த பொருள்களை நான் மீண்டும் பெறவேண்டாமா?'' என்றான் அவன்.

''ராஜர்! என்னால்தான் எல்லாவற்றையும் இழந்தீர்கள். ஊருக்குப் போக வேண்டியவர் கப்பல் ஏறாமல் திரும்பினீர்கள்! பத்தாயிரம் பொன்னையும் இழந்தீர்கள். இவைகளுக்கு எல்லாம் நான் கைம்மாறு எப்படிச் செய்வேன்? சந்தர்ப்பம் வந்தால் நிச்சயம் செய்வேன்!'' என்று சொன்ன கவர்ணமுகி, ''இனி எங்கே போவீர்கள்? என்ன செய்வீர்கள்?'' என்றாள்.

ராஜர் எங்கேயோ பார்த்தான். அவன் கண்களில் அந்த நிச்சயமில்லாத நோக்கம் தத்தளித்தது. எஸ்மரல்டா, அவன் பெற்றோர், பத்தாயிரம் பவுன், நண்பர்கள், இளவரசி, பஞ்சம், நலிந்துபோகும் ஒரு நாடு எல்லாம் கனவுக் காட்சிகளாக வந்து ஓடின.

"ஸாந்தோமே போவேன்!" என்றான் ராஜா கரகரப்பான குரலில்.

"அங்கே என்ன செய்வீர்கள்?"

"யாரிடமாவது கடன் வாங்குவேன். வியாபாரத்தைத் துவங்குவேன்! புறப்படுங்கள் இளவரசி! ராகுகாலம் வந்துவிடப் போகிறது" என்று கூறினான்.

பல்லக்குகளும், பொதி காளைகளும் குதிரைகளும், பரிவாரங்களும் புறப்பட.

ராஜா அந்தச் சத்திரத்து வாயிலில் இளம் காலையில் கால்களை ஊன்றி நின்றான்.

அவனது ஆங்கில நிழல் கீழே சற்று நீட்டமாக விழுந்திருந்தது.

கூட்டத்தின் கலகலப்பு திடீரென்று வடிந்து போனதில் அவன் திடீரென்று தனித்து அனாதை ஆகிவிட்டது போல் தோன்றியது.

திடீரென்று பூமியிலிருந்தே யாவும் மறைந்துவிட்டது போலிருந்தது.

எஸ்மரல்டாவின் குரல் ஆறாயிரம் மைல்களிலிருந்து மெல்லிய அழைப்பாகக் கேட்டது.

"எஸ்மரல்! எஸ்மரல்!" என்றான் திடீரென்று விரக தாபத்தில்.

அவன் ஒவ்வொரு முறையும் 'எஸ்மரல்' என்று அழைக்கும்போது.

விசித்திரமாக அவன் கண் முன்னால் எஸ்மரல்டாவின் சித்திரம் வரவில்லை. அதற்குப் பதிலாக சுவர்ணமுகியின் பிம்பமே வந்தது.

**ஸா**ந்தோமே நகரில் ஒருவித கலப்பான ஐரோப்பிய பண்பாடு உருவாகியிருந்தது. நல்லதும் உண்டு கெட்டதும் உண்டு.

சில பணக்கார போர்த்துக்கீசிய குடும்பங்கள் குடியேறி மேற்கத்திய உல்லாசங்களுக்கு அங்கே புகலிடம் தந்திருந்தன.

கோவாவிலிருந்து வந்த பல குடும்பங்களும், புது இன்பங்களைத் தேடித் தனியான போர்த்துக்கீசியப் பெண்களும் இங்கே குடியேறி இருந்தார்கள்.

இந்திய ராஜா யாரையாவது தங்கள் வலையில் சிக்கவைத்து, அவனிடமிருந்து ஏராள சொத்துக்களை அபகரிக்க வேண்டும் என்று அவர்கள் விருப்பம் கொண்டிருந்தார்கள்.

அன்று மாலையில் ஒரு பல்லக்கில் அர்ச்சுனன் வந்தபோது, இந்திய ராஜா, இந்திய ராஜா என்று செய்தி எங்கும் பறந்தது.

பல போர்த்துக்கீசியப் பெண்கள் வெளியே மினுக்கிக்கொண்டு நின்றார்கள்.

மேற்கத்திய 'வெளுப்பு முகங்கள் இப்படி வரிசையாக அவன் கண் முன் தோன்றியதில்லை.

மழமழப்பான மா பொம்மைகள் போல வாட்டம் சிறிதுமில்லாமல் வளையாத உடம்புகளுடன் அவர்கள் நிற்பதே பார்க்க ஆச்சரியமாக இருந்தது.

உத்தேசமான ஒரு பெரிய மாளிகையின் முகப்பில் நின்றதும், ஒரு பதினாறு வயதிய போர்த்துக்கீசிய சிறுமி விரால் துள்ளலில் அவன் முன்னால் வந்து, தனது வீட்டுக்குள் வரவேற்புக் கொடுத்தாள்.

"இந்திய அடிமைகள் இங்கே இருக்கிறார்களா? அடிமை வியாபாரிகள் இருக்கிறார்களா?" என்று அர்ச்சுனன் வினவ.



"வாங்க, வாங்க" என்று கொச்சைத் தமிழில் அந்தப் பெண் மகிழ்ச்சியோடு பேசினாள்.

அவன் இறங்கி வருவதற்கு இன்னும் கால் சரியில்லை என்று தெரிவித்ததும்,

"நீங்கள் பல்லக்கையே உள்ளே எடுத்துப் போகலாம் மகாராஜா!" என்றாள் சிறுமி.

பல்லக்கு திரும்பியது.

மாளிகையில் அகலமான வாயில் கதவுகள் பிரிந்தன.

உள்ளே அர்ச்சுனன் பல்லக்கில் போக, ரோஜா வாசனை மிருதுவாக மிதந்து வந்து அவனை வசீகரப்படுத்தியது.

பல்லக்கு பெரிய முற்றத்தைக் கடந்து அதை அடுத்துள்ள தாழ்வார மேடையில் வைக்கப்பட்டபோது,

விநோத ஐரோப்பிய கீதம் மெல்லிய திரைச் சீலைகளுக்குள்ளிருந்து வர, ஒரு நேர்த்தியான பதினெட்டு வயதுப் பெண் மேலே மேகக் கூட்டமான வெண் துணிகளின் ஃப்ரில்கள் நடுவே சந்திரன் போன்ற வெள்ளி முகத்துடன், அழகிய சிறு முறுவலை யத்தனமில்லாமல் நிறையச் சிந்திவிட்டு,

"வாருங்கள்! இந்திய ராஜா! வாருங்கள்! இந்திய அடிமை எதற்கு? தங்களுக்கு ஐரோப்பியப் பெண்கள் எப்போதுமே அடிமைகளாக இருக்க விரும்புகிறோம்" என்று கூறி,

அவன் முன்னால் ஒரு கிரேக்க புராணத்து அன்னம் போல நடந்து வந்தாள்.

அர்ச்சுனனின் மூக்கு அருகே ஒரு சிவப்பு ரோஜாவை நீட்ட, அதை முகர்ந்த அவன் சிறிது சிறிதாக நினைவை இழக்க ஆரம்பித்தான்.

(தொடரும்)




## 30. அவனுக்குமட்டும் அமாவாசை!

காங்கிரசைப் பிடித்த சாபக்கேடோ என்னவோ, காங்கிரசின் மேல் மட்டத் தலைவர் என்போர் தங்களை விட இன்னொருவர் வளர்ந்து விடாமல் பார்த்துக்கொள்வதிலேயே அதிகம் கவனம் செலுத்துவார்கள். அதனாலேயே காங்கிரஸ் பல கட்டங்களில் நலிவுற்றிருக்கிறது.

ஆனாலும் இந்திரா காங்கிரஸ் தோன்றிய பிறகு அதில் இருந்தோர் அனைவரும் இந்திராவை மனமார நேசித்தார்கள். ஆனால் பலபேருக்கு ஸ்தாபன காங்கிரஸே பலமாக இருப்பது போல் தோன்றிற்று. அவர்கள் ஸ்தாபன காங்கிரசை விட்டு விலகவில்லை. அங்கேயே நின்றார்கள்.

ஸ்தாபன காங்கிரசோ, சோஷலிஸத்துக்கு எதிரான வழியிலேயே செயல்படத் தொடங்கிற்று.

"பேங்குகளில் ஏழைகளுக்குக் கடன் கொடுத்தால் திருப்பி வசூலிப்பது எப்படி?" என்று ஸ்தாபனத் தலைவர்கள் கேட்டார்கள்.

"உழுகிறவனுக்கு நிலம் சொந்தம் என்றால், ஏறுகிறவனுக்கு ரயில் சொந்தமா?" என்றார்கள்.

அவர்கள் அப்படித்தான் போவார்கள் என்பதை அவன் ஏற்கெனவே கணித்துக் கூறியிருந்தான்.

தனிப்பட்ட நபர் மீது எதிர்ப்பு என்று தொடங்கி, கொள்கை எதிர்ப்பில்தான் போய் நிற்பார்கள் என்பதை அவன் அறிவான்.

ஆகவே தான் எடுத்த முடிவு சரியான முடிவு என்பதை அவன் மீண்டும் உறுதி செய்துகொண்டான்.

அவனிடம் பால்ஊற்றிய பால்காரருக்கும், வேறு சில சிறு தொழில்காரர்களுக்கும் பேங்குகளில் கடன் வாங்கிக் கொடுத்தான்.

பரவலாக இந்திராவுக்கு மக்களிடம் ஆதரவு பெருகி வருவதை அவன் உணர்ந்தான். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக தி.மு.க. எம். பி.க்களையும் சேர்த்துத்தான் இந்திரா அரசாங்கத்தின் பலத்தைக் கணக்கிட வேண்டி இருந்தது. இது கருணாநிதிக்குக் கிடைத்த முதல் லாபம். தமிழக இந்திரா காங்கிரசுக்கு ஏற்பட்ட பெரும் நஷ்டம்.

அதேபோல இந்திராவின் குடுமி தங்கள் கைக்குள்ளேயே இருக்கும் என்று தி.மு.க.வினர் நம்பினார்கள்.

இந்த நிலையில் பாராளுமன்றத்தில் மன்னர் மானிய ஒழிப்புத் தீர்மானம் வந்தது. அதற்கு தி. மு. க.வின் ஆதரவு தேவைப்பட்டது. தீர்மானம் வெற்றி பெற்றுவிட்டது.

தீர்மானம் ராஜ்ய சபாவுக்குப் போயிற்று. ஒரு வோட்டில் தீர்மானம் தோல்வியடைந்தது. அதனால் பாராளு மன்றத்தைக் கலைத்துவிட்டுப் புதிய தேர்தல் நடத்தப் போவதாக இந்திரா காந்தி அறிவித்தார்.

பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. அது ஒரு கொள்கைப் போராட்டமாக இருப்பதால், மாநில அரசுகளைக் கலைத்து மறு தேர்தல் நடத்தும் உத்தேசம் இல்லை என்று இந்திரா காந்தி அறிவித்தார்.

தமிழகத்தில் கருணாநிதி அதைக் காது கொடுத்துக் கேட்டாரா, இல்லை. அந்தப் புது வெள்ளத்தில் தாமும் மீன் பிடிக்க எண்ணினார்.

இங்கே அவருடைய நோக்கத்தைக் குறை கூறலாமே தவிர அவருடைய கெட்டிக்காரத்தனமான கணிதத்தைக் குறை சொல்ல முடியாது.

மேலும் ஒரு வருஷம் ஆளுகின்ற வாய்ப்பிருந்தும் ஒரு தேர்தலைச் சந்திக்க அவர் தயாராகிறார் என்றால், அந்தத் தைரியத்தையும், நுண்ணிய அறிவையும் பாராட்டாமல் இருக்க முடியாது.

இந்திராகாந்தி அதை விரும்பவில்லை. ஆனாலும் அவரது முடிவில் குறுக்கிடவில்லை. காரணம், பாராளுமன்றத் தேர்தலுக்கு தி.மு.க.வின் ஒத்துழைப்புத் தேவைப்பட்டது.

எப்படியோ ஆரம்ப காலத்தி லிருந்தே தமிழகத்தில் இந்திரா காங்கிரஸ் வேறொரு கட்சியின் துணை இல்லாமல் வாழ முடியாது என்று முடிவு கட்டி இருந்தார் இந்திரா.

இரண்டு கட்சிகளும் கூட்டு வைத்துக் கொள்வதற்கான பேரங்கள் நடைபெற்றன.

பாராளுமன்றத் தொகுதிகளில் நியாய மான அளவு விட்டுக் கொடுக்க முன்வந்த கருணாநிதி, சட்டசபைத் தேர்தலில் விட்டுக் கொடுக்க மறுத்து விட்டார். அதில் இந்திரா காங்கிரஸ் கேட்டதும் அதிகம்தான்.

அது 90 இடங்களைக் கேட்டது. கருணாநிதி அதிகப்பட்சம் 60 இடங்களைத் தர ஒப்புக்கொண்டுவிட்டார். அதைப் பெற்றுக் கொண்டிருந்தால் அன்று இந்திரா காங்கிரஸ் பெரிய எதிர்க் கட்சியாகிவிடும்.

1971. தேர்தல் வேலைகள் ஆரம்பமாயின. காங்கிரஸ் தொகுதிகளில் யார்–யார் எங்கே போட்டியிடுவது என்ற பிரச்னை எழுந்தது. ஏற்கனவே கோவையில் நிருபர்களுக்குப் பேட்டியளித்த திரு சி. சுப்பிரமணியம், ''கண்ணதாசன் தேர்தலில் போட்டியிடு வார்'' என்று அறிவித்திருந்தார்.

ஆனால் அவன் போட்டியிடுவதை மோகன் குமாரமங்கலம் விரும்பவில்லை. ''நீ ஏன் டெல்லிக்கு வரவேண்டும்'' என்று நேரடியாகவே அவனைக் கேட்டு விட்டார். இதே மோகன்தான் காங்கிரஸ் பிளவுபட்ட நேரத்தில் இந்திராவை அவன் ஆதரிக்க வேண்டும் என்று நீண்ட கடிதம் எழுதினார். இதே மோகன்தான் டெல்லியில் மந்திரிகளிடமெல்லாம், ''நீங்கள் சென்னைக்குப் போனால் அவசியம் கண்ணதாசனைப் பார்க்க வேண்டும்'' என்று சொல்லி யனுப்பியவர்.

அவனிடம் இவ்வளவு பிரியமாக இருந்த மோகனுக்கு அவன் பாராளுமன்றம் வருவது மட்டும் பிடிக்கவில்லை. காரணம் என்ன வென்பது, நாளது தேதிவரை அவனுக்குப் பிடிபடவில்லை.

''சட்டசபைக்குப் போட்டியிடுவதில்லை'' என்று சி. எஸ். அறிவித்து விட்டார். அதனால் இந்திரா காங்கிரசில் ஒரு குழப்பம் ஏற்பட்டது.

அந்தக் குழப்பத்தை முடித்து வைக்கத் 'தாம் பாராளு மன்றத்துக்குப் போட்டி யிடவில்லை' என்று அவர் அறிவித்தார்.

கடைசி நேரத்தில் மேட்டூர் தொகுதியில் யார் போட்டியிடுவது என்ற பிரச்னை எழுந்தது. ஒரு பெயர் அறிவிக்கப்பட்டு வாபஸ் பெறப்பட்டது. பிறகு கடைசி நேரத்தில் அவசர அவசரமாக வேட்புப் பத்திரத்தைத் தூக்கிக்கொண்டு திரு பூவராகன் அவசர அவசரமாக ஓடினார்.

தி. மு. க.வை விட்டு விட்டு இந்திரா எங்கும் அசைய முடியாது என்று கருணாநிதி முடிவுகட்டிவிட்டார். தேர்தல் களத்தில் அவர் இந்திராவைப் பலபடப் புகழ்ந்தார்.

அவனும் தன் வழக்கம் போல் கருணாநிதி ஜோதியில் கலந்து விட்டான்.

எதிர்க்கும்போது கண்ணை மூடிக்கொண்டு எதிர்ப்பது, கலக்கும்போதும் விவஸ்தை இல்லாமல் கலப்பதும்தானே அவனது தொழில்!

---

## ஒரு கேள்வி, ஒரு பதில்!

## அமைச்சரவையை 'டிஸ்மிஸ்' செய்து சட்டமன்றத்தை நீடிக்கலாமா?

**கேள்வி:** எரிசாராய ஊழல் குற்றச்சாட்டு பற்றி விசாரிக்க மத்திய அரசின் கமிஷன் அமைக்கப்பட்டிருப்பதை யொட்டி, மந்திரிசபையை மட்டும் கலைத்துவிட்டு சட்ட சபையைக் கலைக்காமல் வைத்துவிடப் போகிறார்கள் என்று பரவலாகப் பேசப்படுகிறதே அது பற்றி அரசியல் சட்டம் என்ன சொல்கிறது?

**வழக்கறிஞர் ராதா சீனிவாசன் பதில்:** அரசியல் சட்டம் பிரிவு 356ன் கீழ் ஜனாதிபதிக்கு இவ்வாறு செய்ய அதிகாரம் உள்ளது. மேலும் முதலமைச்சர் மந்திரி சபையின் ராஜினாமாவைத்தான் கவர்னரிடம் கொடுக்க முடியுமே தவிர சொந்தமாக சட்டசபையைக் கலைக்கும்படி பரிந்துரைசெய்ய அவருக்கு உரிமை கிடையாது. அப்படியே அவர் செய்தாலும் அதை ஏற்றுத்தான் நடக்க வேண்டும் என்ற விதியோ கட்டாயமோ கவர்னருக்கோ ஜனாதிபதிக்கோ இல்லை. கவர்னரின் பரிந்துரையை ஏற்று அல்லது அவரைக் கலந்து ஆலோசிக்காமலேயே ஜனாதிபதி மந்திரி சபையையும் சட்ட மன்றத்தையும் சேர்த்துக் கலைத்துவிட முடியும். அமைச்சரவையை மட்டும் டிஸ்மிஸ் செய்யவும் முடியும். ஆனால் மத்திய விசாரணை கமிஷனை ஒரு கௌரவப் பிரச்னையாக ஏற்று, ஒட்டு மொத்தமாகப் பெரும்பான்மை பலம் கொண்ட ஆளும் கட்சி உறுப்பினர்களும் மந்திரி சபையும் ராஜினாமாச் செய்வார்களே யானால் ஜனாதிபதி ஆட்சிதான் வரும். அதற்குப் பின் தேர்தல் நடந்துதான் புதிய ஆட்சி வர முடியும். மந்திரி சபையை மட்டும் கலைத்து, சட்ட மன்றத்தைக் கலைக்காமல் வைத்தால் கட்சி மாற்றங்கள் நடக்கலாம். அதைத் தவிர்க்க மேற்கண்ட விதத்தில் ஆளும் கட்சி நடக்க வாய்ப்பு இருக்கிறது.

பேட்டி: ப்ரியன்



கருணாநிதி அவனை நன்றாகத் தட்டிக் கொடுத்துவிட்டார்.

அவன் தேர்தலில் போட்டியிடவேண்டாம் என்றும், பின்னால் ராஜ்ய சபாவுக்குப் போக லாம் என்றும் அவரும் உபதேசம் செய்தார்.

அது அவருடைய யோசனையல்ல; அவருடைய மருமகனின் யோசனை.

தாங்களே வாழவேண்டும் என்று திட்டமிட்டுக்கொண்டு அரசியலில் இருக்கும் பலர் அப்படித்தானே அவனிடம் நடந்துகொண்டார்கள்! கருணாநிதி என்ன புதியவரா?

ஏணிபோல் நின்று எல்லோரையும் தூக்கி வைத்துவிட்டு, மூலையிலேயே நிற்கும் அவன், தேர்தலில் முழு மூச்சாகப் பாடுபட்டான். யார் ஜெயித்தாலும் அவனுக்கு லாபமில்லை; ஆனாலும் அவன் பாடுபட்டான்.

'கருணாநிதிக்கு மேல் ஆளே இல்லை' என்றான். 'தமிழகத்தில் கருணாநிதி, டெல்லியில் இந்திரா' என்றான்.

உண்மையில் அவனுடைய ரத்தம் நன்றாக இருந்த காலங்களில் எல்லாம் அவன் புத்தி இல்லாமல் நடந்து கொண்டான்.

தேர்தல் பிரசாரம் ஓய்ந்தது.

நாளை வோட்டுப் பதிவு என்றால், இன்று அவனும் கருணாநிதியும் சேப்பாக்கம் விருந்தினர் மாளிகையில் மத்திய அமைச்சர் கே.வி. ரகுநாத ரெட்டியைச்சந்தித்தார்கள்.

மூவரும் பேசிக் கொண்டிருக்கும்போது, ''பாராளு மன்றத்தில் காங்கிரசுக்கு எவ்வளவு இடங்கள் கிடைக்கும்'' என்று கருணாநிதி கேட்டார்.

''மூன்றில் இரண்டு பங்கு'' என்றான்.

''சீச்சீ! என்னய்யா இது? வடக்கே ஜனசங்கம் மிகவும் பலம். மெஜாரிட்டி கிடைக்காது. 'எங்களுக்கு எதுவும் வேண்டாம் என்று தாங்கள் ஆதரிப்போம்'' என்றார்.

'இந்திரா ஊசலாடுவார், தான் அவரை ஆட்டிப் படைக்கலாம்' என்று கருதினார்.

''சட்டசபையில் தி.மு.க.வுக்கு எவ்வளவு இடங்கள் கிடைக்கும்'' என்று கேட்டார்.

''180 இடங்கள்'' என்றான் அவன்.

''என்ன இது, செட்டிப் பிள்ளை கணக்காக இல்லையே...!'' என்று கேலி செய்தார். ''160 இடங்கள்தான் கிடைக்கும்'' என்றார்.

பொழுது விடிந்தது. வோட்டு எண்ணிக்கை ஆரம்பமாயிற்று.

அவன் சொன்னது போலவே நடந்தது.

இரவு பதினொரு மணிக்குக் கருணாநிதி டெலிபோன் செய்தார்.

''என்னய்யா, நீர் சொன்ன மாதிரிதான் எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது! இனி அந்த அம்மா யாரையும் மதிக்காது'' என்றார்.

1971ல் இந்திரா ஊசலாடி, தி. மு. க. வையே நம்ப வேண்டி இருந்திருக்குமானால் ஏறக் குறைய கருணாநிதியே பிரதமராக நடந்து கொண்டிருப்பார்.

ஆனால் கடவுள் இந்திராவைத் தூக்கி உச்சத்தில் உட்கார வைத்து விட்டார்.

1971 தேர்தல் ஸ்தாபன காங்கிரசை அடியோடு புறக்கணித்து விட்டது. பல மூத்த தலைவர்கள் படுதோல்வி அடைந்தார்கள். காங்கிரஸ் '0' 'ஓ' என்பது '0' ஓவாகவே ஆகிவிட்டது. ஜனசங்கம் எல்லாம் இருக்கும் இடம் தெரியவில்லை.

அவன் 'இந்தியா இந்திராவே' என்றொரு கவிதை எழுதினான்.

இந்திய தேசிய காங்கிரஸ் எலும்பும் தோலுமாகக் கிடந்த நிலை மாறி ஆயிரம் யானை பலத்தோடு எழுந்து நின்றது. அவனுக்கிருந்த மகிழ்ச்சி இதுதான்.

ஆனாலும், தமிழக இந்திரா காங்கிரஸ் எலி கிடைக்காத பூனையாக வற்றிப்போய்க் கொண்டிருக்கிறதே என்ற கவலை.

இந்திரா நினைத்ததெல்லாம் நடந்தது. ஒரு மனித ஜீவனுக்கு இது ஆணவத்தைத் தருவது இயற்கை. ஆனாலும் இந்திரா அடக்கத்துடனேயே நடந்து கொண்டார்.

(வளரும்)

---

# நித்யாவின் சொத்து!



வெண் பட்டில் உருளும் கருந் திராட்சை போன்ற துருதுருவென்ற கண்கள், கலகலவென்ற பேச்சு, பளிச்சென்ற சிரிப்பு இவை விளம்பர மாடல் அழகி நித்யாவின் சொத்து.

புடவை கட்டிப் பழகும் பருவத்தில் உள்ள நித்யாவுக்கு என்ன பிடிக்கும்?

''சமையல் என்றால் கொள்ளைப் பிரியம். ஐ மீன் சாப்பிடுவது!'' என்று கூறிச் சிரிக்கிறார். ''காப்பி போட அம்மா கற்றுத் தந்த புதிசு. அம்மா கோயிலுக்குப் போய்விட்டாள். வீட்டுக்கு வந்த விருந்தாளிக்குக் காப்பியில் சர்க்கரைக்குப் பதில் ரவை போட்டுக் கொடுத்துவிட்டேன். அதுதான் எங்கள் வீட்டுக்கு அவர் கடைசியாக வந்தது'' என்று நித்யா சொன்ன போதிலும் இப்போதெல்லாம் ரொம்ப முன்னேற்றம் தான் என்று தெரிய வருகிறது.

''மாடலிங் தவிர வேறு ''ஹாபி'' உண்டா?''

''யாரும் கேட்கவில்லை என்பது நிச்சயமானால் மனம் விட்டு, வாய்விட்டுப் பாடுவதில் ஓர் அலாதி சுகம் காண்கிறேன்!''

அரிசிப் பற்கள் காட்டிச் சிரிக்கிறார் நித்யா.

பேட்டி: சிக்கி

பேஸ்ட்டை வண்ணப் படம்: எம். கே. ராமமூர்த்தி




இது என்ன விநோதப் பழக்கமோ? அவளுக்கே புரியவில்லை. அதென்னமோ தெரியவில்லை. அவளும் கூடாது கூடாது என்று தான் பார்க்கிறாள். நிறுத்த முடியும் என்று தோன்றவில்லை. வீக்னஸ் என்றுகூடச் சொல்லலாம்.

''ஏம்மா... இப்போ அரிசியும் உளுந்தும் கொண்டு வந்தால் அரைச்சுத் தருவீங்களா?''

கவனத்தைத் திருப்பியது அந்த இளம் குரல்.

''கொண்டு வாங்களேன். அரைச்சுத் தரேன்'' இயந்திரத்தனமாக வந்தது பதில். ''ஒரு கிலோவுக்குத் தொண்ணூறு பைசா. ஒரு படிக்கு ஒன்றறு முப்பது.' இட்லிக்கா தோசைக்கான்னு சொல்லிட்டீங்கன்னா அதுக்குத் தகுந்த மாதிரி அரைச்சுத் தருவேன்.''

அமிர்தம் போர்டு போடாமல் பிஸினஸ் செய்து கொழிப்பவள். வீட்டு ஹாலிலேயே வெட் கிரைண்டர் போட்டு அக்கம் பக்கம் தெரிந்தவர் தெரியாதவர்க்கெல்லாம் அரைத்துக் கொடுத்துக் கொண்டிருக்கிறாள். பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் வியாபாரம் சூடு பிடித்தது.

வருகிறவர்களிடம் சிரித்த முகத்துடன் பழகி, அவர்களைப் பர்மனென்ட் கஸ்டமர் ஆக்கிக் கொண்டு விடுவாள்.

எல்லாம் சரிதான். ஆனால் அந்த ஒரு வீக்னஸ் மட்டும்தான் அவளுக்கே புரியாமல் அவளுக்குள் புகுந்து கொண்டு விட்டது. சுருங்கச் சொன்னால் அதீதக் கற்பனை.

மாவரைக்க வரும் பெண்களிடம் கலகலப்பாகப் பேச வேண்டியதுதான். அதற்காக? திடீரென்று தன் கதையைச் சொல்வதாக ஆரம்பிப்பாள். சும்மா இஷ்டத்துக்கு வாய்க்கு வந்த கற்பனையெல்லாம் சரளமாய்ப் புகுந்து விளையாடும். வருகிறவர்களுக்குத் தன் மேல் முழுப் பரிதாபம் ஏற்பட்டுவிட வேண்டும். அத்தனை உருக்கமாய்ச் சரடு விடுவாள். அரை சதவீதம் கூட உண்மையைத் தப்பித் தவறியும் கலந்து விட மாட்டாள்!

கொஞ்ச நேரம் முன்னால் விசாரித்துக் கொண்டு போன பெண் பெரிய பாத்திரங்களில் ஊறவைத்த சமாசாரங்களைக் கஷ்டப்பட்டுச் சுமந்து வந்தாள்.

''இருந்து அரைச்சு வாங்கிட்டுப் போறீங்களா?... வெச்சுட்டுப் போய் அப்புறம் வந்து எடுத்துக்கிறீங்களா?''

''இருந்தே வாங்கிப் போறேன்...அவசரம் இல்லே...'' நீளமாய் அரக்கு பார்டர் சேலை அணிந்து கொண்டிருந்த அந்தப் பெண் பெஞ்சின் மேல் உட்கார்ந்தாள்.

உளுந்தை நிதானமாய் எடுத்துக் கிரைண்டரில் போட்டவாறு அந்தப் பெண்ணைப் பார்த்தாள் அமிர்தம். சிறு வயசுதான். இருபதைத் தாண்டி யிருக்க மாட்டாள்.

கொள்ளை அழகு. கழுத்தில் அதிநாகரிகமாக மெல்ல்...ல்...ல்...லிய சங்கிலி தொங்கியது. பத்துப் பிடி!

''நீங்க எங்கே இருக்கீங்க?'' சாதாரணமாய்ப் பேச்சை ஆரம்பித்தாள்.

''போன வாரம்தான் – பக்கத்துத் தெருவில் குடிவந்தோம்.'' – சிக்கனப் பதில்.

''உன் பேர் என்னம்மா?''

''வனிதா.''

''படிக்கிறியா?''

''பி.ஏ. முடிச்சுட்டேன்.''

உளுந்து பாதியாகி – காலாகி – அரைக் காலாகிப் பொடிந்து மசிய ஆரம்பித்தது. கிரைண்டரின் சீரான சப்தத்தில் ஒரு சீதம் இருந்த மாதிரிப் பட்டது.

''இது முன்னாடி எங்கே இருந்தீங்க?''

''திருச்சியிலே.சில துக்கங்கள் நடந்துடுத்து. அப்பா காலமாயிட்டார். அதற்கப்புறம் அங்கே இருக்கப் பிடிக்காமல் நாங்க இங்கே அண்ணு கூட வந்துட்டோம்.'' – இப்போது தான் கொஞ்சம் அதிகம் பேசுகிறாள்.

''ஹூம். நான்கூடத் திருச்சியிலதான் இருந்தேன். உனக்காவது அப்பா இறந்தார்! எனக்குப் புருஷனே போயிட்டார். அப்புறம் பிழைக்க வழியில்லாமல் ரொம்பத் திண்டாடினேன். எத்தனை நாள் நகைகளை வித்துச் சாப்பிட முடியும்? அப்போ ஒரு மகானுபாவர் ரொம்ப உதவி பண்ணினார். கைக் காசைப் போட்டுக் கிரைண்டர் வாங்கிக் குடுத்தார். இத்தனைக்கும் என்கிட்ட எந்தப் பிரதி பலனையும் எதிர்பார்க்கலே!''

''அப்படியா? ரொம்ப உபகாரமாய் இருந்திருக்கும்'' – ஏதோ பதில் சொல்ல வேண்டுமே என்று சொல்லி வைத்தாள் வனிதா.

அமிர்தத்துக்குத் தாங்க முடியாத திருப்தி. இவளை ஒரு கற்பனைக் கதையில் மடக்கிப் போட்டாகி விட்டது. இனிமேல் இவளுக்குத் தன்மேல் ஒரு நிரந்தரப் பரிதாபம் ஏற்பட்டு விடும்.

திரும்பிப் பார்த்தாள். செய்தித் தாள் படபடத்தது. நினைவாஞ்சலிப் பகுதியில் ஒரு கண்ணியமான மனிதரின் படம். கீழே அவரின் பெயரும் ஊரும்!

தன் கதைக்கு முத்தாய்ப்பு வைக்கக் கிடைத்தது ஒரு அருமையான பெயர்.

''இப்போதும் கூட திருச்சி மகாலிங்கம் ஐயர்னு யாராவது சொன்னால் போதும். அவர்கள் காலிலேயே விழுந்து வணங்கிடுவேன்'' – திருச்சி ஸ்டேஷன் கூட எப்படி இருக்கும் என்று அவளுக்குத் தெரியாது!

சட்டென்று அந்தப் பெண் எழுந்தாள். தன் அப்பா யாரோ ஒரு பெண்மணிக்காகப் பணத்தைச் செலவழிக்கிறார் என்று அம்மா நம்பிக்கொண்டு அவர் இறந்த பிறகும்கூட அவர்மேல் அந்த ஆத்திரத்தை வைத்துக் கொண்டு.... ஓ! உடனே ஓடிப்போய் அம்மாவிடம் இந்த மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளவேண்டும். அப்பா பணம் செலவழித்தது இத்தனை நல்ல காரணத்துக்காகவா?

மாவை மறந்து மடமடவென்று வாசலில் இறங்கி நடந்தாள் வனிதா. விழித்தாள் அமிர்தம்!


ஆரோக்கியம், ஆனந்தம்,
ஒன்றுக்கொன்று ஆதாரம்
SPECIAL REFILL PACK
Save Re.1/-
Cadbury's
Bournvita
The tastier food drink
Cadbury's
Bournvita
The tastier food drink
உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன.
இப்போது! பெரும் சேமிப்பு ஒரு முழு ரூபாய்
ரீ:பில் பேக்குடன்
காட்பரீஸ்
போர்ன்விடா
அளிப்பது அத்தனையும் நலம்

OBM 6617 TM

# போர்ஹென்ஸ்—பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்




## உங்கள் பற்களை சுத்தம் செய்யும் போதே ஈறுகளையும் வலுப்படுத்த உதவுகிறது

**ஈறு உபாதையால் ஆரோக்கியமான பற்களைக்கூட இழக்க நேரிடும்**



பல் டாக்டர்கள் கூறுகிறார்கள், உங்கள் பற்களை சரிவர சுத்தம் செய்யவில்லையெனில் பற்களையும் ஈறுகளையும் சுற்றி, மெல்லிய கிருமிகளின் படிவமாகிய ஊத்தை (Plaque) தோன்றுகிறது. இதுவே காலடைவில் பற்காறையாக மாறி, ஈறுகளை பலவீனப்படுத்தி, அவற்றைத் தள்ளுவதால் ஆரோக்கியமான பற்களும் விழுந்து விடக்கூடும்.
ஈறுகெட்டால் உடல் நலமே கெடும்.

**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**



டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஃபார்முலாவின் விசேட (அஸ்ட்ரின்ஜென்ட்) சேர்க்கைப் பொருள் உங்கள் ஈறுகளை வலுப் படுத்தி ஈறு உபாதைகளைத் தடுக்க உதவுகிறது. ஆகவே, போர்ஹென்ஸ் டூத் பேஸ்ட், போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் கொண்டு பற்களைத் துலக்குங்கள்; ஈறுகளைத் தேய்த்துக் கொடுங்கள்.




251 F-303 TAM

**போர்ஹென்ஸ்**—ஈறுகளுக்கெனவே

Regd. T.M. Geoffrey Manners & Co. Ltd.

# கடல் மீன்கள்

ஐ.வி. சசியின் மலையாள வலையிலிருந்து தப்பிய 'மீன்' தமிழில் 'கடல் மீன்கள்' ஆகியிருக்கிறது. முழுக்க முழுக்கக் கடலும் கடல் சார்ந்த இடமுமே கதையின் தளம். எம்ஜிஆரும் மற்றவர்களும் போட்டு அரைத்தெடுத்த மாமூலான கதைதான். இந்த முறை கமல்.

தன் தாயைப் புறக்கணித்த தந்தையைத் தனயனே பழிதீர்க்கிறான், ஏகப்பட்ட மசாலா வேலைகள் செய்து. மீண்டும் இணையும் அப்பா அம்மா இருவரும் இறந்துபோக அப்பாவின் ஆசைப்படி இருவர்க்கும் மகன் ஜலசமாதி அமைக்கிறான்.

தந்தை வேடத்தில் தலைப் பொடுகைச் சொரியும் மேனரிசத்துடன், கரகரத்த குரலில் பேசி வித்யாசமாய்ச் செய்கிறார் கமல். இளைய கமல், வாணி தந்த காஸ்ட்யூம்களில் அழகாய் வந்து அடிக்கடி அடிதடி போடுகிறார்.

கமலின் ப்ரிய நாயகியாய் ஏற்றுக்கொள்ள முடியாவிட்டாலும் சுஜாதாவைப் பின் பகுதியில் அம்மாவாகப் பார்க்க முடிகிறது. பிரிந்து, மீண்டும் சந்திக்கையில் தன்னைத் தொட வரும் கணவனை மறுத்து ஏதோ 'தவம்' அது இது என்று ஏகமாய்க் குழப்புகிறார் சுஜாதா.

என். கே. விசுவநாதன் வெளிப்புறப் படப்பிடிப்பிலும், இளையராஜா பாடல் காட்சிகளிலும் திறமையைக் காட்டுகிறார்கள். தேங்காய், நாகேஷ், தங்கவேலு என்று காமெடி மும்மூர்த்திகள். மூர்த்தி பெரிது கீர்த்தி சிறிது. ஸ்வப்னா, அம்பிகா, நிழல்கள் ரவி, ஜெயச்சந்திரன் என்று ஏகப்பட்ட பேர். இருக்கிறார்கள் அவ்வளவுதான்.

கதை, தான் போகிற போக்கிற்குப் போகட்டும் என்று எல்லாக் கேரக்டர்களும் வளைந்து கொடுக்கின்றன. ஏகப்பட்ட சொத்துக்களைக் கொஞ்சமும் அறிவில்லாமல் ஒருவர் மாற்றி ஒருவர் மற்றவர்க்கு சாதாரணமாய் எழுதி வைத்துப் பின் ஏமாறுகிறார்கள்.

பொன் எடுத்து நகை செய்கிறோம் என்ற பெரிய நினைப்பில் நிறைய உழைத்திருக்கும் இந்த யூனிட், கையில் இருப்பது வெறும் மண் என்று உணராமல் போனதுதான் கஷ்டம். மலையாளத்தில் மீன் — தமிழில் கருவாடு!

—சிந்து — ஜீவா



# லால்குடி ஜெயராமன்

## வயலின் இசைத்தட்டு.

## பம்பாய் ஷண்முகானந்தா ஹாலில் செய்த நேரடிப் பதிவு.

ஸ்ரீ சங்கர மடம் கட்டட நிதிக்காக லால்குடி ஜெயராமன் அளித்த வயலின் இசையை ஸ்டீரியோ LP இசைத்தட்டாக (S/33ESX. 17537) வழங்குகிறோம். இது எச்எம்வி நேரடியாகப் பதிவு செய்த முதல் கர்நாடக வாத்திய இசையாகும்.

இதிலுள்ள இரண்டு கீர்த்தனைகள், ஸ்ரீ ஆதிசங்கரரின் புகழ்பாடி, அவர் பெருமைகளைக் கூறுகின்றன. லால்குடி ராகங்களை அழகாகக் கையாண்டு அருமையாக வாசித்துள்ளார். இனிய இசைகேட்டு மகிழும் எல்லோருக்கும் இந்த இசைத்தட்டு ஒரு நல்விருந்து.

எல்லா எச்எம்வி டீலர்களிடமும் கிடைக்கும்.




தி கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

சிறந்த கலைஞர்கள்—
சிறந்த இசை.

விரைவில் எச்எம்வி மியூசிக்காஸெட்டுகளில் வெளியிடப்படும்.



HTM GCI-2636



திருடன்: ரயில் பயணங்களில், சங்கிலியைப் பிடித்து இழுத்தால் 500 ரூபாய் அபராதம். தெரியுமா?
மகன்: தங்கச் சங்கிலியா, கோல்டு கவரிங் சங்கிலியா?

—உ. சுயம்புலிங்கம்




''என்னங்க இது இத்தனே நாளாவியுமா யாரும் கண்டுக்கலே?'' —புலியூர் பிரபா



● எம். ஜி. ஆர்., அ.இ. அ.தி.மு.க.வின் எதுவாகத் திகழ்கிறார்?
''ஆணிவேர்.''

● மந்திரி பதவியை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் ப. உ. சண்முகத்துக்கு என்ன சமாதானம் சொல்லலாம்?
''விடியும்வரை காத்திரு.''

● இன்றைய அரசியலில் மிகவும் அதிகமாகக் காணப்படுவது?
''இல்லு முல்லு''

● ராஜ்நாராயணன் எந்தக் கட்சிக்குப் போனாலும் அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் அவரை எதுவாக நினைப்பார்கள்?
''சுமை''



● மொரார்ஜி தேசாய் பாரத தேச மக்களை எப்படி அழைக்கிறார்?
''வெளிச்சத்துக்கு வாங்க.''



● கப்புடுவின் விமர்சனத்தைப் பார்த்து விட்டு விமர்சனத்துக்கு உள்ளாகிறவருக்கு கப்புடுவை எதை வைத்துத் தாக்க வேண்டும் போலிருக்கும்?
''கல் தான்.''

விஜயா கண்ணன்



ஒருவன்: பாலைவனச் சோலையில கதா நாயகன் ஏன்டா தாடியோடவே இருக்கான்?
மற்றவன்: பாலைவனத்தில ஒரு சோலை இருந்தா எப்படி இருக்கும் ன்றதைக் காட்டத்தான்.

ஆர். கார்த்திகேயன்



அவன்: நீ கமல் ரசிகையா இருக்கலாம். அதுக்காக நானே போய்க் 'கடல் மீன்' பிடிச்சிட்டு வந்தால்தான் கறி வைப்பேன்னு சொல்றது நியாயமா?

--நயினாரகரம் குலஸ்

●

அவன்: 'இரயில் பயணங்களில்' எடுத்த நம்ம டி. வி. இராஜேந்தர் ஒரு தப்புப் பண்ணிட்டார்டா!
நண்பன்: என்னதுடா அது?
அவன்: அவரே சொந்தத் தியேட்டர் கட்டி அதிலேயே ரிலீஸ் பண்ணியிருக்கலாம்!

—வி. மனோகர்

# கழுத்தில் விழுந்த மாலை 23

லக்ஷ்மி

செண்பக மரத்தடியில் போடப்பட்டிருந்த சிமெண்ட் ஆசனத்தில் இருவரும் அமர்ந்து கொண்டனர். சொன்னபடியே மாதங்கி, நர்மதா அம்மா வீட்டுத் தோட்டத்தில் அவனைத் தேடி வந்து விட்டது ஒரு சிறு ஆறுதலை அளித்தது.

எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது? தொண்டையைச் செருமிக் கொண்டான். ஓரக் கண்ணால் அவளைக் காலோடு தலை வரை ஆராய்ந்தான்.

நீலவண்ண வாயில் சேலை இடையில், காதுகளில் முத்துத் தோடு, கழுத்தில் தாலிச் சரடு... அப்பாடா! அதைத் தூக்கி எறிய வில்லை.! கைகளில் பிளாஸ்டிக் வளையல்... மிக எளிமையான கோலத்தில், அதிக அழகுடன் அவள் காணப்பட்டாள். இத்தனை நாளும் இந்த அபூர்வ அழகை ரசிக்கத் தெரியாத மடையனாக இருந்து விட்டோமே! உள்ளம் வருந்தியது.

''என்னவோ பேசணும்னு சொன்னீங்க'' மாதங்கி அவனை நிமிர்ந்து பார்த்தபடி கேட்டாள்.

''இந்த நீல நிறச் சேலை உனக்கு ரொம்ப அழகா பொருத்தமா இருக்கு...'' மென்று விழுங்கியபடி முடிப்பதற்குள், அவள் 'களுக்' கென்று சிரித்தாள்.

''இதைச் சொல்லவா சென்னையிலிருந்து இவ்வளவு தூரம் புறப்பட்டு வந்தீங்க?'' வேடிக்கையாக அவள் கேட்டதும், திடுக்கிட்டுப் போனான் அவன்.

மாதங்கி மாறித்தான் போயிருக்கிறாள். முன்னைவிடப் பளிச்சென்று காணப்படுவது போலவே பளீரென்று மிகத் துணிச்சலாகப் பேசவும் தெரிந்து வைத்திருக்கிறாளே?

''சுத்தி வளைக்காமச் சொல்லிடறேன் மாதங்கி! அம்மாவுக்கு உடம்புக்கு முடியாம நர்ஸிங் ஹோமிலே சேர்த்திருக்கு.''

''சொன்னீங்களே.''

''நீ இல்லாம வீடு வீடாவே இல்லே. அதனாலே... உன்னைக் கூட்டிக்கிட்டுப் போகணும்னு வந்தேன்.''

''எதுக்கு? வீட்டைப் பார்த்துக் கொள்ளவா?''

''மாதங்கி! என்னை மன்னிச்சுடு. எனக்கு எப்படி, எங்கே ஆரம்பிச்சுப் பேசறதுன்னே விளங்கலே.'' பரிதாபமாகக் கூறினான் அவன்.

மாதங்கி மெதுவாகப் புன்னகைத்தாள்.

''உன்கிட்ட முதல்ல, நான் செய்த தவறுகளுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, உன்னை என் மனைவியா வாழும்படி வேண்டிக் கொள்ளத்தான் வந்தேன். மாதங்கி! சத்தியமா என்னை நம்பு....''

''கட்டாயக் கல்யாணத்திலே உங்களுக்கு ரொம்ப வெறுப்பு ஏற்பட்டிருந்திச்சே!''

''ஆரம்பத்திலே வெறுப்பு இருந்தது என்னவோ உண்மைதான். ஆனால், நாளடைவில் உன் மேலே கொஞ்சம் கொஞ்சமாக எனக்கு உண்மையான அன்பு ஏற்பட ஆரம்பித்திருந்ததை நானே உணரத் துவங்கின சமயம்தான் அந்த மொட்டைக் கடிதம் வந்து மனசைக் குழப்பிட்டது.''

''இப்பத் தெளிஞ்சுட்டதாக்கும்!'' குறும்பாகக் கேட்டாள் அவள்.

''ஆமாம். அந்த மொட்டைக் கடிதம் உங்க பெரியம்மாவோட சூழ்ச்சின்னு தெரிந்துவிட்டது. நான் பித்பாடு எத்தனை வேதனைப் பட்டேன் தெரியுமா? ஆனால், அதே சமயம் உன்மேலே ஏற்பட்ட பிரியத்தால தான், எனக்கு அப்படி ஒரு கோபம் வந்ததுன்னு புரிஞ்சுகொண்டேன்.'' பெருமூச்சு விட்டான்.

மாதங்கி பதில் பேசவில்லே.

''அதுமட்டுமா? உன்கிட்ட வேறே, என்னைப்பத்தி உங்க பெரியம்மா கதை கட்டிவிட்டாங்களாமே?''

''ஆமா, சொன்னாங்க... ஏதோ கார் விபத்துல...''

''அது பெரும் பொய்!'' என்று கூவினான் ஹர்ஷன்.

''இப்ப என்ன அதுக்கு? நான்தான் அதை நம்பலியே? பயமுறுத்தினாங்க. வெளியே சொல்லவில்லே.''

''மாதங்கி! நீ ரொம்ப உயர்ந்த மனசுடைய பொண்ணு. என்னைப் போல ஆத்திரப்பட்டு, அவசரப்பட்டு முடிவெடுக்கலே.''

''நடந்ததைப் பத்தி இப்ப என்னங்க.''

''இல்லே மாதங்கி! உங்க பெரியம்மா சொன்னது பொய்யின்னு நாம வாழ்ந்து காட்டணும். தயவு செஞ்சு எனக்கு ஒரே ஒரு முறை சந்தர்ப்பம் கொடு. நல்ல கணவனா நான் வாழ்ந்து காட்டுகிறேன்.'' கெஞ்சினான்.

மாதங்கியின் கண்கள் கலங்கின.

''எங்கம்மாவைச் சரிவரப் புரிஞ்சுகொள்ளாம, அவளையும் அவளோட நல்ல மனசை

யும் நான் நோக அடிச்சேன். அதனாலே, என் அம்மாவுக்கும் நல்ல பிள்ளையா வாழ்ந்து, அவங்க மனசையும் குளிரச் செய்ய முயல ணும்னு ஆசைப்படறேன், மாதங்கி! என்னை நம்பு. உறுதியாச் சொல்றேன். என்னை இனி யாவது மன்னிப்பாயா?'' என்று உணர்ச்சி வசத்தால் தடுமாறினான் ஹர்ஷன்.

''கொஞ்சம் நிதானமாகப் பேசுங்க'' என் றாள் மாதங்கி கனிவாக.

''உன் கடிதத்தைப் படிச்சேன். விவாக ரத்து தேவைன்னு நீ மிக அவசரமான முடிவை எடுத்திட்டேன்னு எனக்குத் தோணிட்டது. அதப் பத்தி சரியா எடுத்துச் சொல்லி, நேராகவே பேசித் தீர்த்துப் பிடலாம்னுதான் உன்னை டெலிபோனில் கூப்பிட்டுப் பார்த்தேன். ஆனா, நீ போனை பட்டுன்னு வச்சிட்டயே....' குழந்தை போல அரற்றினான் அவன்.

''கடிதாசியைப் படிச்ச கோவத்திலே, என்னைத் தாறு மாறாத் திட்டத்தான் 'போன் பண்றீங்க'ன்னு நினைச்சேன். அந்தப் பயத் துல 'டக்'குனு போனை வச்சிட்டேன்'' முறு வலித்தாள் மாதங்கி.

''என்னைப் பத்தின தப்பான எண்ணம் தானே உன் மனசிலே உருவாகியிருக்கு... இல்லையா?''

''உருவாக்கினது.... நீங்கதானே....''

''மாதங்கி! நான் பழைய ஹர்ஷன் இல்லே!''

''சந்தோஷம்!''

''நீ இன்னிக்கு 'இண்டர்வியூவுக்குப்போய் வந்திருக்கே. வேலை கிடைச்சிடும்னு நர்மதா அம்மா சொன்னாங்க.''

''ஆமாம்.''

''மாதங்கி! உனக்கு வேலை பார்க்க ஆசை யாக இருக்கலாம் இல்லியா?'' என்று குழை வுடன் கேட்டான் ஹர்ஷன்.

''ஆமாம். எனக்கு வேலை பார்க்க எப் போதுமே ஆசைதான்.'' கூறியபடி எழுந் தாள் மாதங்கி.

ஹர்ஷன் முகம் கருங்கியது. ''அப்படி யானால்....''

''நர்மதா அம்மா வரட்டுமே. அவங்க எனக்குக் கை கொடுத்து ஆதரிச்சதாலே, தாய் போல... அவங்களும் வந்த பிறகு முடிவு செய்தா நல்லது....''

சட்டென மாதங்கியின் கரங்களை ஒரே தாவலில் எட்டிப் பற்றிக் கொண்டான் ஹர்ஷன்.

''ப்ளீஸ்! மாதங்கி! என்னை ஏமாற்றி விடாதே. நான் ஒரு நல்ல முடிவு காண வேணும்னுதான் இத்தனை தூரம் ஓடோடி வந்திருக்கேன். தவறு செய்தவன் இருந்து வதற்கு ஒரே ஒரு வாய்ப்புத்தான் நான் கேட்கிறேன்.''

# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகளுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.




"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.

## திட்டமிட்ட பரிபூரண உணவு
# காம்ப்ளான்®

லின்டாஸ்-GLC. 10-3015 TM

மாதங்கியின் கண்களில் நீர் பனிச்சிட்டது.

''கையைவிடுங்க...நர்மதா அம்மா வராங்க.'' மெல்லத் தன் கரங்களை விடுவித்துக் கொண்டாள்.

காரை நிறுத்திவிட்டு இறங்கிய நர்மதா இருவரையும் ஒரே கணத்தில் பார்வையால் அளந்தாள்.

''மாதங்கி! பேசி முடிச்சிட்டியாம்மா?''

மாதங்கி மகிழ்ச்சி பொங்கச் சிரித்தாள்.

ஹர்ஷன் வியப்புடன் நின்றான். 'மனம் விட்டு இன்னும் மாதங்கி எந்த முடிவும் சொல்லவில்லையே? இதென்ன கேள்வி?'

நர்மதா உரக்கச் சிரித்துவிட்டு ஹர்ஷன் பக்கம் திரும்பினாள்.

''உள்ளே போ ஹர்ஷன்! வீடு தேடி வந்த மருமகப்பிள்ளைக்கு காப்பிடியுன்கூடக்கொடுக்காம வாசலிலேயே நிறுத்தி வச்சுப் பேசிக்கிட்டிருக்காளே இந்தப் பொண்ணு!'' என்றாள் உற்சாகமான குரலில்.

மாதங்கி ஹர்ஷனை மென்மையாகப் பார்த்து முறுவலித்துவிட்டு உள்ளே சென்றுவிட்டாள்.

ஹர்ஷன் உள்ளத்திலே நம்பிக்கை உதயமாகியது. புதுத் தெம்புடன் அவன் நர்மதாவைப் பின்பற்றி உள்ளே ஆவலுடன் சென்றான்.

''இன்னிக்கு ராத்திரி உங்க ரெண்டு பேருக்கும் நம்மவீட்டிலே விருந்து.இன்னிக்கு என்னோட ரெண்டு பேரும் தங்கியிருந்து, நாளைக் காலைல புறப்பட்டுப் போனால் போதும். என்ன நான் சொல்றது கேட்கிறதா?'' அதட்டலாக உரிமையுடன் உத்தரவு போட்டாள் நர்மதா.

முட்டுக்கட்டையாக நர்மதா இருப்பாள் என்று அஞ்சிக் கொண்டு வந்தவனுக்கு ஆனந்தம் கட்டுக் கொள்ளவில்லை.

கண்டிப்புக்காரி என்றாலும் கடமை உணர்ச்சி உடையவளாக இருக்கிறாள். நல்லவேளை... எல்லாம் எளிதிலே கைகூடிவிட்டது. தன்னுள் எண்ணி மகிழ்ந்தான்.

இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு கழுவிக்கொண்ட கையைத்துடைக்கத் துவாலையுடன் வந்த மாதங்கியை ஆசையுடன் பார்த்தான் ஹர்ஷன்.

''பெரிய ஆள் மாதங்கி நீ! என்னை எப்படிக் கலங்க அடிச்சிட்டே தெரியுமா? எங்கே நீ என் முகத்தில் அடிச்சாப்பலே வர மறுத்து விடுவாயோன்னு என் மனசு பட்ட பாடு.. அப்பப்பா...'' சொல்லியபடியே துவாலையுடன் அவளது கரங்களைச் சேர்த்துப் பிடித்தான். உரிமையோடு அவளை அருகே இழுத்துக் கொண்டான்.

''ஸ்... நர்மதா அம்மா வராங்க... இதையெல்லாம் நம்ம வீட்டிலே வச்சுக்கலாம்.. இருபத்து நாலு மணி நேரம் பொறுக்கக் கூடாதா?'' கேலியாக மாதங்கி சிரித்தாள்.

மறுநாள் நர்மதாவிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டு... கணவனுடன் மாதங்கி சென்னைக்குப் புறப்பட்டாள்.

காரைத் தங்கள் வீட்டுத் தோட்டத்துக்குள் செலுத்திய ஹர்ஷன் திகைத்தே போனான்.

செம்மண் கரை கட்டிய மாக்கோலம் வராந்தாவைப் பளிச்சென அலங்கரித்தது.

ஆரத்தித் தட்டுடன் விழி மேல் வழி வைத்தபடி வேலைக்காரம்மா நெற்றி நிறையக் குங்குமமும், வாய் நிறைய வெற்றிலைக் காவியுமாக நின்று கொண்டு சிரித்தாள்.

வாயிற் பக்கத்துக் கதவின் மீது மாவிலைத் தோரணம் காற்றில் அசைந்தாடிக்கொண்டிருந்தது. உள் பக்கமிருந்து ஊதுபத்தியின் மணம் கம்மென்று முகத்தில் வந்து மோதியது.

''அம்மா! அவங்க வந்தாச்சு... வேலைக்காரம்மா பரபரப்பாக உரக்கக் குரல்கொடுக்கக் கஸ்தூரி ஆவலாக வெளியே வந்தாள்.

திடுக்கிட்டுப் போனான் ஹர்ஷன். ''அம்மா நீங்க இங்கே எப்படி?.. '' வியப்புடன் கேட்டபடி காரிலிருந்து இறங்கினான்.

''நேத்தே நர்ஸிங் ஹோமிலிருந்து என்னை டாக்டர் வீட்டுக்கு அனுப்பிட்டார். நர்மதா எனக்கு விவரமாப் போன் செய்திருந்தா'' என்ற கஸ்தூரி உரிமையுடன் முன்னே வந்து ''ம்...! ரெண்டு பேரும் அப்படியே ஒரு நிமிஷம் நில்லுங்க....'' என்று உத்தரவிட்டாள்.

வேலைக்காரம்மா ஆரத்தி சுற்றிக் கொட்டின பிறகு உள்ளே வந்த மாதங்கி!... ''அத்தே!'' என்று ஆசையுடன் ஓடிவந்து மாமியாரை அணைத்துக்கொண்டாள்.

மருமகளை ஆதரவோடு மார்பில் அணைத்துக்கொண்ட கஸ்தூரியின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் முத்துக்கள் பெருகின. மாதங்கியின் தலை மீது ஆசித் துளிகளாகச் சிதறின.

''எப்படி இருக்கீங்க அத்தே! நான் இல்லாம ரொம்பக் கஷ்டப்பட்டீங்களாமே?...!'' அன்புடன் வினவினாள் மாதங்கி.

''எனக்கு இனி ஒரு வியாதியும் இல்லே. எந்தக் கஷ்டமும் ஏற்படாது. நீ வந்துட்டேங்கற மகிழ்ச்சியிலே நான் நிறைவோட ஆரோக்கியமா ரொம்ப நாள் வாழப்போகிறேன். ஏன் தெரியுமா?....'' என்று கேட்டபடி இருவரையும் இரு பக்கமும் அணைத்தபடி உள் பக்கம் சென்றாள் கஸ்தூரி.

''சொல்லுங்கம்மா...'' என்றான் ஹர்ஷன் அருமையுடன்.

''என் பேரப் பிள்ளைகளை மடியிலே வச்சுக்கொண்டு அவங்களுக்குக் கதைசொல்ல வேணாமா? அதுக்காகத் தான்...'' உரக்க மகிழ்ச்சியுடன் சிரித்தாள் கஸ்தூரி.

எல்லாவற்றையும் புரிந்து கொண்டு விட்டது போல் அவர்களுக்கு முன்னால் ரோவர் உற்சாகமாகக் குரைத்தபடி குதித்தோடி வந்து கொண்டிருந்தது.



# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...



## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**




HES. G. 4. TM

# ஐ.ஓ.பியின் ரொக்கப் பத்திரம் பெருகிவரும் பொறுப்புக்களின் மறு தோற்றம்.

வாழ்நாள் முழுவதும் நீங்கள் நேசிக்கும் பெற்றோர்கள், மனைவி, குழந்தைகள், பேரக் குழந்தைகள் இவர்களுக்காக நீங்கள் செய்யவேண்டிய கடமைகளும் எடுத்துக் கொள்ளும் பொறுப்புக்களும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகும்.

இ.ஒ.பியின் ரொக்கப் பத்திரம் உறவினர்கள் மீது தொடர்ந்து காட்டும் உங்கள் அக்கறையை எடுத்துக் காட்ட சிறந்ததொரு திட்டமாகும். சிறிய தொகைக்கு இன்று நீங்கள் வாங்கும் ரொக்கப் பத்திரம் பெருகி வரும் காரிய செலவுகளைச் சமாளிக்க உதவுகிறது. உங்கள் பத்திரத்தின் மதிப்பு காலஇடை வில் மும்மடங்காகப் பெருகிவிடுகிறது. சரியான தருணத்தில் இதைப் பண மாக்கி எதிர்பார்த்த செலவுகளைச் சமாளிக்கலாம்.

ரூ. 372க்கு இன்று நீங்கள் வாங்கும் இ.ஒ.பி. ரொக்கப் பத்திரத்தின் மதிப்பு 10 ஆண்டுகளில் ரூ. 1000மாக உயர்ந்துவிடுகிறது. மாதந்தோறும் செலுத்த வேண்டியது எதுவும் கிடையாது. ரொக்கப் பத்திரத்தின் விலை குறைந்த பட்சம் ரூ. 37.20ம் அதிகபட்சம் ரூ. 92,800ம் ஆகும். இப்பத்திரத்தை, முறையே பத்தாண்டு கள் கழித்தும் ஓராண்டு கழித்தும் பணமாக்கலாம்.

உங்கள் அருகாமையிலுள்ள இ.ஒ.பியின் கிளையை அணுகுங்கள். இ.ஒ.பி ரொக்கப் பத்திரத்தை ஈரதே நிமிடங்களில் பெற்றுச் செல்லுங்கள்.



**இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்




IOB-5A-81-Tam

இந்திய இலக்கியப்பரிசுகளில் மதிப்பு மிக்க பாரதிய ஞானபீடப் பரிசு மறுபடி ஒரு மலையாள எழுத்தாளருக்குக் கிடைத்துள்ளது. இந்தப் பரிசுத் திட்டம் துவங்கியவுடன் 1965ம் ஆண்டில் முதல் முதல் இதனைப் பெற்றவர் ஜி. சங்கர குருப். அது கவிதை நூலுக்கு. இந்த ஆண்டு பரிசு பெறும் எழுத்தாளர் எஸ். கே. பொட்டேகாட் தமது மலையாள நாவலான "ஒரு தேசத்திண்ட கதெ" நூலுக்கு லட்ச ரூபாய் பரிசும் பரிசுச் சின்னமான வாக்தேவி சிலையையும் பெறுகிறார்.

மலையாள வாசகர் மட்டுமின்றி இந்திய வாசகர் அனைவருமே மகிழத் தக்க செய்தியே இது. எத்தனையோ ஆண்டுகளுக்கு



✖ வாக்தேவி சிலை

1972ம் ஆண்டு மத்திய சாகித்திய அகாடெமியின் அந்த ஆண்டுக்கான சிறந்த மலையாள நூல் என்ற விருதையும் பரிசையும் பெற்றது தான். இப்போதோ சிறந்த இந்திய இலக்கியப் படைப்பு என்றவிருதையும் பரிசையும் பெறுகிறது. சராசரிமலையாள நாவல்களுக்கு இது பெரிய நூல்தான். 630 பக்கங்கள் பொடி எழுத்தில். சாகித்ய அகாதெமிப் பரிசு பெற்றவர்களே பொதுவாக ஞானபீடப் பரிசையும் பெற்றிருக்கிறார்கள் என்றாலும் இரண்டு பரிசையும் ஒரே நூலே பெறுவது என்பது ஒரு சிறப்புத்தானே! இதற்கு முன்பு காண்டேகரின் 'யயாதி' என்ற மராத்தி

# ஞானபீடம் ஏறும் பொட்டேகாட்

முன்னமேயே தம்மை முழு நேர எழுத்தாளராக அர்ப்பணித்துக்கொண்டுவிட்ட 'சங்கரன் குட்டி குன்னிராமன் பொட்டேகாட்' மலையாளத்தில் எழுதினாலும் தம்மை வெறும் மலையாள எழுத்தாளராக மட்டும் கருதவில்லை. அவரது படைப்புகளும் அப்படியே. மொழி எல்லையையும் பிரதேச எல்லையையும் நாட்டு எல்லையையும் சிலவேளை கால எல்லையையும் கடந்து நிற்கும் சில எழுத்தாளர்களில் ஒருவர் பொட்டேகாட்.

பொட்டேகாட் முன்பு எழுதிய நூல்களில் ஒன்றுக்குப் பெயர் "ஒரு தெருவிண்டே கதெ!" இப்போது பரிசு பெற்றுள்ள "ஒரு தேசத்திண்ட கதெ" என்பது கிராமப்புறமான அதிராணிப்பாடத்தின் கதை; சுமார் ஐம்பது ஆண்டு காலப் பகுதியில் வாழ்ந்த மூன்று தலைமுறை மக்களின் கதை: அவர்களின் இதயத் துடிப்பையும் மண் மாண்பையும் அறியும்போது உலகெங்கும்பொருந்தும் பொதுவான அம்சங்களை வாசகர் உணர முடிவதால் இது (மலையாளத்தில் எழுதப்பட்டும்) உண்மை 'இந்திய இலக்கிய' நாவல்களுள் ஒன்றாகும்.

இது புதிய நாவல் இல்லை. சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பே எழுதப்பட்டது. சுயசரிதச் சாயல் கொண்ட இந்த நாவல்



✖ எஸ். கே. பொட்டேகாட்



அருள்வாக்கு

## வாக்கின் பயன்

● 'நரஜன்மம் துர்லபம்; அதுவே உயர்ந்தது' என்பது ஏன் என்று யோசித்தேன். யோசனை செய்ததில் மிருக ஜன்மத்தில் உள்ள ஒரு பெரிய குறை தெரிய வந்தது. மிருகங்களுக்குப் பாபம் இல்லாவிட்டாலும் பயம் இருக்கிறது. எப்போது யார் தன்னைக் கொல்வார்களோ என்கிற பிராண பயம் கொடிய மிருகத்துக்கும் கூட நிறைய உண்டு.

மனிதனுக்கும் பலவிதமான பயங்கள் உண்டு. ஆனால் பயமில்லாமல் செய்துகொள்ள மனிதனுக்கு மட்டுமே வழி உள்ளது. மிருகத்துக்கு இந்த வழி இல்லை. பயம் இல்லாமல் செய்துகொள்வது எப்படி? பிறவி இல்லாமல் செய்துகொண்டால்தான் பயம் இல்லாமல் இருக்கலாம். 'எல்லாம் நாம்தான்' என்கிற ஞானம் வந்துவிட்டால் எதனிடமும் பயம் இராது. அந்த ஞானத்துக்குப் பின் சரீரம் விழுந்தால் இன்னொரு சரீரம் எடுக்க மாட்டோம். இந்த ஞானத்தை அடைகிற மார்க்கங்கள் மனிதனுக்குத்தான் இருக்கின்றன. மிருகங்களுக்கு இல்லை. மனிதன் ஞானத்தை, அபயநிலையைஜன்ம நிவிருத்தியை அடையவே மகான்கள் வாக்கைப் பயன்படுத்தினார்கள். வேத வேதாந்த இதிஹாஸ புராண தர்ம சாஸ்திரங்கள் எல்லாம் வாக்கு இருப்பதால் தானே உண்டாயின? பாஷை, லிபி, புத்தி இவற்றுக்கு இப்பேர்ப்பட்ட உயர்ந்த பிரயோசனம் இருப்பதைப் புரிந்து கொண்ட பின் ஆறுதலாக இருந்தது. பகவான் தந்திருக்கும் புத்தியால், வாக்கால், பிறருக்கோ தனக்கோ நாசம் உண்டாக்காமல் எவ்வளவோ நல்லது செய்யலாம். பாபமும் துக்கமும் பயமும் நீங்க வாக்கைப் பயன்படுத்த வேண்டும். இதற்கெல்லாம் அடிப்படை பக்தி. வாக்கு தெய்வ சம்பந்தமாகப் பயனாக வேண்டும். இதனால்தான் அக்ஷராப்பியாச காலத்தில் ஆரம்பிக்கும்போதே 'நமோ நாராயணாய' என்று விரலைப் பிடித்து எழுதி வைக்கிறார்கள். பகவான் தான் கொடுத்திருக்கும் வாக்கை இவன் எப்படிப் பிரயோஜனம் செய்கிறான் என்று பார்த்துக் கொண்டே இருக்கிறான். லோக க்ஷேமத்துக்கும் ஆத்ம க்ஷேமத்துக்கும் அதைப் பயன் செய்யாவிட்டால் அடுத்த ஜன்மாவில் வாக்கற்ற மிருகமாகப் படைப்பார்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நூல் இப்படி இரட்டைப் பரிசைப் பெற்றுள்ளது.

1913ல் கள்ளிக்கோட்டையில் (இப்போது கோழிக்கோடு) பிறந்த இரு பொட்டேகாட் ஆங்கில ஆசிரியராகப் பள்ளிக்கூடத்தில் மூன்றாண்டு வேலை பார்த்தவர். இருபத்தாறுவது வயதில் பம்பாய் சென்று ஸ்டெனோகிராபராகவும் வேலை பார்த்தார். முழுநேர எழுத்தாளராகவேண்டும் என்ற தாகம் தணியாத தாகமாக இருந்ததால் இந்த வேலைகளில் மனம் ஈடுபடவில்லை. எப்போதும் எங்கும் பயணம் செய்து கொண்டிருக்க வேண்டும் என்னும் ஓர் அரிப்பு. பம்பாய் வேலையைத் துறந்துவிட்டு 1941 முதல் சுமார் இரண்டாண்டுகள் அனைத்திந்தியாவும் சுற்றிப் பார்த்தார். மறுபடி பம்பாய் வந்து முற்போக்கு எழுத்தாளர் மகாநாட்டில் கலந்துகொண்டு சில காலம் பம்பாய் நெசவாலை கமிஷனர் அலுவலகத்தில் வேலைபார்த்து மறுபடி அலுத்துப்போய்ச் சில மாதங்கள் காஷ்மீரிலும் வட மாநிலங்களிலும் சுற்றப் போய்விட்டார்! இத்தனை அனுபவமும் இவரது எழுத்துக்குக் களம். தொடக்க காலத்தில் எழுதிய சில நூல்கள் அப்போது மொழிவாரி பிளவுபடாத சென்னை மாகாண அரசின் பாராட்டையும், பரிசையும்பெற்றன. 'யவனகாக்கு பின்னில்' என்ற சிறுகதைத் தொகுப்பு அப்படிப்பட்டது.

''விஷ கன்யகா'' என்ற நாவல் 1948ல் வெளிவந்ததும் பொட்டேகாட்டின் தனித்தன்மையை வாசகர்களும் சக எழுத்தாளர்களும் உணரத் தொடங்கினர். அடுத்த ஆண்டே கிடைத்த ஒரு வாய்ப்பைப் பயன்படுத்திச் சில ஆப்பிரிக்க நாடுகளுக்கும் இதாலி, ஸ்விட்ஜர்லந்து, ஜெர்மனி நாடுகளுக்கும் சென்று வந்தார். இந்த இடங்களில் இவர் கண்டதைப் பயணக் கட்டுரைகளோடு நிறுத்திவிடாமல் இவரது கதைகளிலும் நாவல்களிலும் ஏற்றியுள்ளார்.

தகழி, கேசவதேவ் போன்ற சிறந்த மலையாளக் கதாசிரியர்களைப் போல இவரும் சமுதாயத்தின் அடித்தள மாந்தர்களையும் அவர்கள் பிரச்னைகளையும்' வைத்து எழுதினாலும் இவரை வர்க்கப் போராட்டக்காரர்

என்று கருதிவிட முடியாது என்கிறார் ஒரு விமர்சகர். இவரது எழுத்து ஒன்றே இவருக்குப் புகழ் சேர்த்துக் கொடுத்த தென்பில் தல்லசேரி தொகுதியில் 1957 பார்லிமெண்டு தொகுதிக்கு நின்று வெறும் ஆயிரம் வாக்கு வித்தியாசத்தில் தோற்றார். விடவில்லை. அடுத்த தேர்தலில் (1962) அதே தொகுதியில் நின்று அறுபத்தாறாயிரம் வாக்கு வித்தியாசத்தில் வென்றார்! முழு ஐந்து ஆண்டு காலம் டில்லியில் பார்லிமெண்ட் உறுப்பினராகச் செயலாற்றினார். அப்போது எழுதிய நாவலே ''நார்த் அவின்யூ'' என்ற நாவல். (இது எம். பி.க்கள் வாழும் ஒரு தெருவின் பெயர்.) பார்லிமெண்டில் பல எழுத்தாளர்கள் உறுப்பினராக இருந்த போதிலும் தேர்தலில் வென்று வந்தவர் குறைவே; ராஜ்ய சபை நியமன உறுப்பினரே அதிகம்.

பார்லிமெண்டு உறுப்பினர், மத்திய சாகித்திய அகாதெமி செயற்குழு உறுப்பினர், கேரள சாகித்திய அகாதெமி துணைத் தலைவர், எழுத்தாளர் கூட்டுறவு இயக்கத்தின் தலைவர் என்றெல்லாம் பல பதவிகள் வகித்தது எதையும் பெரிதாகக் கருதாத பொட்டேகாட் இந்த உயர்ந்த லட்ச ரூபாய் பரிசு கிடைத்தபோதும் இயல்பான எளிமையுடன், ''இது ஒரு முழு நேர எழுத்தாளனுக்குக் கிடைத்த வாழ்த்து. மலையாள எழுத்துக்கு வரும் பெருமை'' என்றார்.

நமது நாட்டிலும் பிற நாடுகளிலும் பயணம் செய்வதிலேயே சுமார் நாற்பது வயதைக் கழித்துவிட்ட பொட்டேகாட் பிறகே திருமதி ஜெயவல்லியை மணந்தார். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் கொண்ட குடும்பம். இன்று ஞானபீடப் பரிசு மகிழ்ச்சியைக் கொண்டாட மனைவி இல்லை. துணைவியை இழந்த துக்கத்தை வெளிப்படுத்தாமல், அதை மறைப்பதற்கே போல், நகைச் சுவையாக எழுதவும் பேசவும் இப்பொழுது முனைந்து வருகிறார்.

— தம்பி சீனிவாசன்

# பழக்கடைக்கு வயது 50

மூறளகம் — டெலிபோன் ஹவுஸ், வெளியூர் செல்லும் பல்லவன் பஸ் நிலையம், நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் சாலை இவற்றுக்கு நடுவில் உள்ளதுதான், சென்னைவாசிகளுக்கு மிகவும் பரிச்சயமான 'பழக்கடை' பகுதி. பெயர்தான் பழக்கடையே தவிர, பூ, புத்தகம், ஃபான்ஸி ஐட்டங்கள் உட்பட அத்தனையும் விற்கும் கடைகள் இருக்கின்றன.

1931 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டு, தற்போது பொன் விழா காணும் இப்பழக்கடையின் வரலாற்றைக் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக இங்கு மூக்குக் கண்ணாடிக் கடை வைத்துள்ள திரு ராயப்ப ரெட்டி, முதலில் சரியாக நினைவில்லையே என்று மறுத்தாலும், பிறகு சொன்னார்: ''ஆரம்பிக்கப்பட்டபோது சென்னை மாகாண கவர்னர்: மேதகு ஹோப். இன்று மணிக் கூண்டுடன் நிற்கும் சதுர வடிவிலுள்ள கட்டிடத்துக்குள்தான் அப்போது ஐந்தாறு கடைகளே இருந்தன. இதன் வளர்ச்சியில் சென்னை மாநகராட்சியின் கமிஷனர்களாய் இருந்த திரு புல்லா ரெட்டி, திரு ஷெனாய் ஆகியோருக்கு முக்கிய பங்குண்டு. மாநகராட்சி தன் வருமான பற்றாக்குறையைச் சமாளிக்க, கொத்தவால் சாவடியின் பூ வியாபாரிகளைக் கொண்டுவந்து, இங்கே வியாபாரம் செய்ய வைத்தது. ஜனத் தொகை அதிகரிக்க, அதிகரிக்க, பழக்கடைக் கட்டிடத்துக்கு வெளியிலும் கடைகள் வரிசையாக வந்தன.''

இன்று சுமார் நூறுக்கும் அதிகமான பழக் கடைகள் உள்ளன. இது தவிர மற்ற கடைகள். ஒவ்வொரு பழக்கடைக்கும் வாடகை மாதம் இருபத்திரெண்டரை ரூபாய். கடை அளவு நாலுக்கு நாலு அடி. வாழையும், திராட்சையும் எல்லா சீசனிலும் கிடைக்கின்றன. மற்ற பழங்கள் சீசனில்தான் கிடைக்கும். வாழைப் பழமும் திராட்சையும் கொடைக்கானலில் இருந்து வருகின்றன. மாம்பழம் ஆந்திராவிலிருந்தும் சேலத்திலிருந்தும். ஆப்பிள் டில்லி காஷ்மீரிலிருந்தும் சாத்துக்குடி ஆந்திராவிலிருந்தும், அன்னாசி கேரளத்திலிருந்தும் வருகின்றன.

இங்கு வியாபாரிகள் சங்கம், பழக்கடை சங்கம் தவிர கட்சிகளின் பெயரிலும் சங்கங்கள் உண்டு.

இன்றைய பழக்கடையின் நிலை என்ன?

ஒருமுறை சுற்றிவந்தபோது பல விஷயங்கள் கண்ணில் பட்டன. ஒரு லட்சம் பேருக்கு மேல் வந்து போனாலும், குடிநீர் வசதி கிடையாது. சேறும் சகதியுமாக, ஓர் இருண்ட சூழ்நிலை. கட்டிட வராந்தாவில் நரிக்குறவர் குடும்பம். இவையெல்லாவற்றுக்கும் மேலாகக் கூடை வியாபாரிகள். கூடையுடன் நடு வழியில் உட்கார்ந்து கொண்டு விடுகிறார்கள். ஜனங்கள் நடமாடுவதே கஷ்டமாக இருக்கிறது. அவ்வப்போது ஒரு போலீஸ்காரர் வந்து மிரட்ட, கூடை வியாபாரிகள் கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு போவது போலப் போக்குக் காட்டிவிட்டு, போலீஸ்காரர் அகன்றதும் மீண்டும் கடையைப் பரப்புகின்றனர். பழக் கடையில் கார்ப்பரேஷன் அதிகாரி அலுவலகம் காணப்பட்டாலும் ஒன்று அலுவலகம் மூடிக் கிடக்கிறது. அப்படி இல்லாமல் திறந்திருந்தாலும் அதிகாரி கண்ணில் படுவது அபூர்வம்.

— எஸ். சந்திரமௌலி

அடுத்த பக்கங்களில் கார்டூன் : நடனம்








சொன்னதையே சொல்லிட்டிருக்கியே!
அதான் பழுக்கணுங்க!
வாழையக் கேட்டதும் 'ஆன்னு' வாயைப் பிளந்தா, எப்படி?
ஆ...ப்பிளாச்சேப்பா!
பழம் நல்ல சிவப்பா இருக்கணும்பா.
நீங்கதான் நல்ல சிவப்பழமா இருக்கீங்களே...
பழம், கிழம் வாங்கணுமா?
ஆமாம், கிழப்பழமா, அதாவது அளிஞ்ச பழமா வாங்கணும்!
அண்ணே, உங்களுக்கே நல்லா இருக்கா? எல்லாப்பழத்தையும் அமுக்கிப் பாத்தீங்கன்னா நான் ஜூஸ் கடைதான் வைக்கணும்!


டஜன் ஆறு ரூபா!



# ஃப்ரூட் மார்க்கெட்


'வாழைப்பழம் வேண்டாம்னு சொல்ற குரங்கு உண்டான்னு சொல்லுவாங்க...
பழக்கடைக்கு வந்தா போதும் 'பழ'மொழி உதிர்க்க ஆரம்பிச்சுடுவீங்களே!


CORPORATION FRUIT MARKET


அது பேருக்குத்தான்! பழ வியாபாரமெல்லாம் பக்கத்து சந்திலேதான்!
ஃப்ரூட் மார்க்கெட்டிலே பழக்கடையைத் தவிர பாக்கி எல்லா கடையும் இருக்கு!

பகபதி கொஞ்சம் ஆயாசப்பட்டுக் கொண்டார்.

அரை மணி நேரம் முந்திக் கொண்டிருந்தால் தரிசனம் கிடைத்திருக்கும். வந்த வேலை முடிந்தது என்ற மலர்ச்சியில் இந்நேரம் அவர் மனம் பஞ்சு போல் லேசாகி மிதந்து கொண்டிருக்கும்.

''என்ன யோசிக்கிறீங்க? காலையிலே தரிசனத்தை முடிச்சுக்கிட்டுப் புறப்பட்டாப் போச்சு. எல்லாத்தையும் நான் கவனிச்சுக்க மாட்டேனா!'' என்றார் பூபாலன்.

அர்த்தச் செறிவுடன் சிரித்துக் கொண்டார் அவர். ரொம்ப ஆழமான ஆசாமி. இந்தப் பிராந்தியத்தில்பகபதிக்கு ஆகவேண்டிய காரியங்களைமுடித்துக்கொடுப்பவர்பூபாலன்தான்.

பகபதிக்குத் தனி ராசி. எந்தப் பக்கம் போனாலும் வி.ஐ.பி. மரியாதையுடன் வரவேற்கவும் உபசரிக்கவும் உல்லாசத்தில் மிதக்க விடவும் பிராந்தியப் பிரதிநிதிகள்... கொடுத்து வைத்தவர்!

''பூபால்... கொட்டு கொட்டுன்னு ஒரு ராத்திரியை எப்படிக் கழிக்கிறது இங்கே?''

பகபதி கேட்டபோது பூபாலன் சிரித்துக்கொண்டார்.

## ஜே.எம்.சாலி

''ஒரு ராத்திரி! இதுவா கஷ்டம்... நான் இல்லே?''

விரலை நொடித்தார், கவலையை விடுங்கள் என்கிற மாதிரி.

வருஷத்துக்கு இரண்டு தடவையாவது பகபதி இங்கே வருவார். பெரும்பாலும் குடும்பத்துடன். அல்லது சகாக்களுடன். சில மணி நேரம் தங்கிவிட்டுக் காரிலேயே திரும்பிவிடுவார். அநேகமாகப் பகற்பொழுதில்... சித்ரான்னங்களுடன். கார் டிக்கியில் நிறைத்துக்கொண்டு. அம்மன் தரிசனத்துக்காக!

இன்றைக்கு எல்லாம் தலைகீழ்! வேறு வேலையாகப் பக்கத்து நகருக்கு வந்தவர். திரும்பும் வழியில் தரிசனத்துக்காக இங்கே வருவதில் தாமதம் ஏற்பட்டு விட்டது.

இந்த ஊர் அம்பாள் பகபதியின் குடும்பத்துக்கு இஷ்ட தெய்வம். குடும்பத்தில் எது நடந்தாலும் இங்கே வந்து போவார்கள். வெகு காலமாக அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது.

இப்பொழுதுகூட பகபதி மனசில் ஒன்றை நினைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறார். குடும்பத்தில் நிகழவேண்டிய ஒரு மங்கல காரியம். பூபாலனிடம் சொல்லவில்லை இன்னும்.

''ஒன்றும் யோசிக்காதீங்க... இது நல்ல ஓட்டல். பிடிக்கலேன்னு சொல்லுங்க. வேறே இடம் போட்டுடலாம்!'' என்றார் பூபாலன்.

''இதுவே நல்லாத்தான் இருக்கு பூபால். ஏ.஁ஸி. ரூம் போட்டிருக்கீங்க...நீங்க சொல்ற மாதிரி இந்த ஒரு ராத்திரிதானே... போதும் நீங்க அலட்டிக்காம இருந்தாச் சரிதான்.''

''ஆமாங்க. ரொம்ப சௌகரியமான இடம்... எல்லாத்துக்குமே!''

இப்பொழுது ஆரவாரம், சந்தடி, சலசலப்பு இல்லாமல் ஓர் இரவுப் பொழுது கிடைத்திருக்கிறது. ஒரு புத்தம் புதிய புஷ்பம் குழந்தையின் கையில் கிடைத்த மாதிரி. என்ன செய்யலாம்? எப்படி அனுபவிக்கலாம்?

இரவு ஒன்பது மணி.

சாப்பாடு கொண்டு வருவதாகச் சொன்னார் பூபாலன்.

எட்டு மணிக்கு ஒரு சின்ன தர்க்கம்.

இந்த ஓட்டலிலேயே சாப்பாடு எடுத்துக் கொள்ளலாம் என்றார் பகபதி. பூபாலன் ஒத்துக்கொள்ளவில்லை.

''உங்களுக்குப் பிடிச்ச மாதிரி சமையல் செய்யச் சொல்லிவிட்டேன். ரெடியாகியிருக்கும்...''

பகபதியின் ரசனை அவருக்குத் தெரியும். வீட்டில் கிடைக்காதவற்றை வெளியிடங்களில் சாப்பிட்டுக் கொள்வார்.

பூபாலன் இத்தனை சீக்கிரம் ஏற்பாடு செய்திருப்பது பகபதிக்கு வியப்பைத் தர



வில்லே. இவருடைய பிரதிநிதிகள் எல்லோருமே என் என்ருல் எண்ணெயுடன் நிற்பவர்கள்! அதிர்ஷ்டசாலி!

பூபாலன் புறப்பட்டுப் போவதற்கு முன் கடை பரப்பிவிட்டுப் போனுர். கண்ணுடி தம்ளர்... ஐஸ் கட்டிகள்...அரை பாட்டில்...

அந்தக் கட்டிகள் கரையக் கரையப் பகபதி பருகப் பருக களைப்பு, அலுப்பு, சலிப்பு எல்லாமே விலகிப் போன மாதிரி உணர்ந்தார். பூபாலனைத் தட்டிக் கொடுக்க வேண்டும் போல் இருந்தது. இத்தனை இங்கிதமாக, நாகரிகமாக ஒரு விருந்தாளியை உபசரிக்கத் தெரிந்திருப்பதே ஒரு கலேதான். பூபாலனுக்கு அது கைவந்திருக்கிறது.

சாப்பாட்டு அடுக்கைத் திறந்தபோது அந்தப் பெருமையும் பூரிப்பும் இரட்டிப்பாகியது பகபதிக்கு. குறைந்த இடைவெளியில் என்னவெல்லாம் செய்யச் சொல்லியிருக்கிருர், இந்தப் பூபாலன்!

பலத்த சாப்பாடு. அளவாகவே சாப்பிட்டார், ருசித்து... அனுபவித்து. வீட்டில் கிடைக்காதவை. மனைவியோ மற்றவர்களோ தீண்டாத ஐட்டங்கள்...

பத்து மணி.

பகபதி சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டார்.

பூபாலன் இனி காலையில்தான் வரப் போகிருர். தரிசனம் முடிந்து ஊருக்குப் புறப்படு முன் அவரைக் கவனித்துக்கொள்ள வேண்டும்.

இரவின் இனிய அமைதியில் இதயம் சிறகு விரித்துக் கொள்கிறது. மெது மெதுவாக உயர உயரப் பறப்பது போல் பகபதிக்கு ஒரு சுகானுபவம்.

உறங்கிவிடலாமா? இல்லே. உறக்கம் வராது போல் இருக்கிறது. அதற்கும் ஒரு மருந்து உண்டு. மருந்தா, விருந்தா?

மனம் சிலிர்த்து எழுகிறது. என்ன தேவை இப்பொழுது?

கதவு சன்னமாகத் தட்டப்பட்டது.

''யார்...?'' என்ற கேள்வியுடன் கதவுப் பக்கம் குத்திட்டுப் பார்த்தார்.

பூவை ஒற்றி எடுக்கும் லாகவத்துடன் ஒரு கை கதவைத் தொட்டு விலக்குகிறது.

முதலில் கை... பிறகு முகம்! அழகிய முகம்....

''யாரு?''

# தரிசனம்



புன்னகையுடன் எட்டிப் பார்த்தாள் கதவைத் தள்ளிய பெண்.

''யெஸ்... கம் இன்!''

உள்ளே வரச் சொன்னதும் வெகு நளினமாக அவள் வந்தாள்.

''நீ....!'' என்று நீட்டினுர்.

மறுபடியும் அவளிடம் புன்னகை. 'புரியவில்லேயா?' என்று வினவுகிற மாதிரி.

புரிந்தது. பூபாலனின் வேலேயா? சூசகமாக அவர் உணர்த்திவிட்டுத்தான் போயிருக்க வேண்டும். பகபதி கவனிக்கவில்லேபோலிருக்கிறது.

இளம் பெண். அழகாக இருந்தாள். பறித்து முகரச் சொல்லும் ஒரு வண்ணப் பூவைப் போல.

''பூபாலன்...?'' – முனு முனுப்பாக அவளைக் கேட்டார். அவர்தானு அனுப்பி வைத்தது என்ற அர்த்தத்தில்...

பதில், புன்முறுவல்.

அவளைப் போகச் சொல்வதா, இருக்கச் சொல்வதா?

ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தார். சலனப் பட்டுப் போயிற்று மனம்.

இருபது இருக்குமா? மிஞ்சிப் போனல் இருபத்திரண்டு அல்லது அதற்கு மேல் ஒன்று....

உட்காரச் சொல்லிவிட்டார்.

சமமாக, சரிக்குச் சரி, அவருக்குப் பக்கத்தில் அவள்....

''என்ன பேரு?''

''ராஜி....!''

''அதுதானு மொத்தப் பேரும்?''

''இல்லே... ராஜேஸ்வரி, சுருக்கமா ராஜி!''

பார்த்தார் பொருத்தமான பெயர்.

''படிப்பு?''

தலையை அசைத்தாள், புன்சிரிப்புடன். படித்திருக்கிறாளாம்.

இதுமாதிரி சந்தர்ப்பங்களில் என்னென்ன கேட்கலாம், எவ்வளவு பேசலாம் என்பதெல்லாம் பசுபதிக்கு அத்துபடி. எதை விரும்புவார்கள், எதற்கு முகம் சுளிப்பார்கள் என்பது தெரியும்.

''சாப்பிடுறியா?''

வேண்டாம் என்றாள்.

''என். வி. சாப்பிடுவியா?''

பதில், நெகடிவ்.

''அப்போ விக்கர்?''

அதே பதில்.

இதுவும் கிடையாதா? கேட்டால் ஊற்றித் தரவாவது தெரியுமா?

''ராஜி, அந்தக் கிளாஸில் கொஞ்சம்...''

அவள் புரிந்து கொண்டாள்.

''உனக்குஇஷ்டமில்லேன்னு வேண்டாம்.''

ராஜி பிகு பண்ணிக்கொள்ளவில்லை. ஊற்றியபடி, ''நீங்க இந்த ஊருக்குப்...''

''புதுசான்னு கேக்கறியா? அப்பப்ப வருவேன்.''

''பிசினஸ் ரூர்... இல்லே?''

''இல்லே... தரிசனத்துக்காக!''

ராஜி வியப்போடு பார்த்தாள்.

''ஏன்? தரிசனத்துக்காக எவ்வளோ பேர் வரலியா இங்கே? அம்பாளைச் சேவிக்கிறதுக்காக அப்பப்போ வருவேனே!''

''இப்பவுமா?''

அவர் தலையாட்டினார். ராஜி புன்னகை செய்தாள். அது அவருக்குப் பிடித்தது. என்ன அழகான, இயல்பான புன்னகை!




● சரிதாவை மட்டும் நம்பி எடுக்கப்பட்ட படம். அவரையும் சரியாக உபயோகிக்காமல் விட்டது டைரக்டரின் குற்றம் (1). படம் பூரா குழப்பத்துடன் ... ண்டுபோய் என்ன செய்வது என்று தலையைப் பிய்த்துக் கொண்டு (நாமும்) கடைசியில் அபத்தமாக முடித்து வைத்தது குற்றம் (2).

ராஜேஷ் கேரக்டரைச் சரியாக விவரிக்காமல் விட்டதும் கதையின் தடுமாட்டத்திற்குக் காரணம். அவ்வளவு பழகிய சுதாகருக்கு முகம் விகாரமான பின்னரும் ஒருவர் கூட ஆஸ்பத்திரி போய்ப் பார்க் அற்ற மக்கள் தற்காலத்தில் திறமையைக் காட்டி நல்ல சந்தர்ப்பம் கிடைப்பது கோட்டைவிடும் சாமர்த்தி வரும். என்றும் ஊரார் பாவமாய்த்தான் உள்ளது. மனதில் பூகம்பம் வெடிப் பாவமாய்க் காட்டாமல் காட்டும்போது பிரிக்குமள ரசனே வளர்ந்துள்ளதே. இடைவேளை வரை காதல் கண்டு மூச்சி ஆடுவதில் தான் கதை சூடுபிடிக்கிறது. சோர்ந்து விடுகிறது. சும்மா ''பாரில் சார்வருக்கு 9,10, பல்ல போகலாம். நான்

| | |
|---|---|
| சரிதா நடிப்புக்கு | ரூ. 0-50 |
| கங்கை அமரனுக்கு | ரூ. 0-40 |
| ஆக மொத்தம் | 0-90 |
| கொடுத்தது | ரூ. 2-90 |
| கிடைத்தது | ரூ. 0-90 |
| நஷ்டம் | ரூ. 2-00 |

காத மனிதாபிமானம் சாத்திய மல்ல. பெயர் வாங்க நல்ல அரிது. அதையும் யம் சுதாகருக்குத்தான் ஏகம்போது கொஞ்சம் என்ன செய்ய; பதை முகத்தில்சிறு எரிமலை வெடிப்பதைக் வுக்கு ரசிகர்களின் போதாக்குறைக்கு ஹும் காதலியும் செலவிட்ட பிறகு அதற்குள் நமக்குச் சொல்லக் கூடாது. 11, 11-ஏ ஆகிய என்னவோ

11 Aல போகத்தான் விரும்புறேன்.'' இது போல கைதட்டல் வாங்கும் பொருத்தமான வசனமும் உண்டு. அதே சமயம் கேலிக்கூத்தான வசனமும் உண்டு. கதை-வசனம் விசு சக்கரவர்த்தி (வண்டிச் சக்கரம்)யின் நடிப்பு நிறைந்துள்ளது.

—நவீன சாஸ்திரி

# அசல் க்ளூகோன்-டி®

# ஒன்றே ஒன்று தான் உண்டு.

## அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.




மட்டமான போலிகள் பலவற்றுள், க்ளாக்ஸோ நிறுவனத் தயாரிப்பான அசல் க்ளுகோன்-டி யினை நீங்கள் வாங்குவது முக்கியம். இல்லையெனில், போலிகள் மூலம் உங்கள் குடும்ப உடல்நலத்திற்கே பேராபத்து வரலாம். க்ளாக்ஸோ நிறுவனத்தின், முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பாகும் க்ளுகோன்-டி, வைட்டமின் $D_3$, பாஸ்பரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் அடங்கியது. தங்களுக்குத் தேவையான போது சக்திபெற லட்சக் கணக்கானோர் அருந்துவது இது.

க்ளுகோன்-டி தயாரிப்போர், க்ளாக்ஸோ — பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம். வாங்கும் க்ளுகோன்-டி பேக்கெட் அசல்தானா எனப் பார்த்து வாங்குங்கள்.

**க்ளூகோன்-டி®** சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.
**க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

® டிரேடுமார்க்

பளிங்குக் கோபுரம் போல் பளிச்சென வெண்மை தரும்
சலவைக்கு ஒரே சோப்பு...

# கோபுரம்

## சலவைச் சோப்பு

அழுக்கை அகற்றுவதில் அற்புத வெண்மை தருவதில்
ஆடை அணிகலன்களை அழகாக சலவை செய்வதில்·
இணையில்லாத சோப்பு கோபுரம் சலவை சோப்பு



**தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்**
சென்னை-1

''ராஜி, ஏன் சிரிக்கிறே?''
''சிரிக்கணும் போல இருந்தது... உங்க மேலே பிரியம் வந்தாச்சு!''
''ஏன் அப்படி? என்ன விசேஷம்?''
பகபதி நெருங்கி வந்தார்.
''அம்பாள் பக்தர்னு சொன்னீங்களே!''
''நீயும் அம்மன் பக்தையா?''
சிரித்தாள்.
''ராஜி, நீ ரொம்ப அழகா சிரிக்கிறே... அழகா.....''

பகபதியின் மனத்தில் மகிழ்ச்சி முட்டுகிறது. ராஜேஸ்வரி அழகாக இருக்கிறாள். சாதுரியமாகப் பேசுகிறாள். ரசனைகளின் களஞ்சியமாக இருக்கிறாள்.... சராசரிப் பெண்ணாக இருக்க மாட்டாளோ!
இப்படி ஒருத்தியைப் பூபாலன் துணையாக அனுப்பியிருக்கிறாரே....
மானசீகமாகப் பூபாலனைத் தட்டிக் கொடுத்தார்.
''ராஜி....!'' — குரலில் மையல்.
''ராஜேஸ்வரின்னு.....!''
''ஓ! அப்படிக் கூப்பிடச் சொல்றியா... சரி.... ராஜேஸ்வரி...!''
''இன்னொரு தரம்!''
''ராஜேஸ்வரி...ராஜேஸ்வரி! போதுமா?''
''நான் ஒண்ணு கேட்கட்டுமா?''
''கேளு ராஜேஸ்வரி!''
''அம்பாளைத் தரிசிக்க வந்திருக்கீங்க இல்லையா?''
''ஆமா ராஜேஸ்வரி!''
''மனசிலே ஒரு காரியத்தை நினைச்சுக்கிட்டுத்தானே?''
''ஆமா ராஜேஸ்வரி!''
''அதை நான் கேக்கப்படாது இல்லையா?''
''கேக்கலாம் ராஜேஸ்வரி... தெரிஞ்சுக்கலாம் ராஜேஸ்வரி!''
''அப்ப... சொல்லுங்க!''
''ராஜேஸ்வரி! என் பொண்ணுக்குக் கல்யாண ஏற்பாடு. அது நல்லபடியா நடக்க இந்த அம்பாளுடைய அநுக்கிரகம் வேணும் அதுக்காக.....!''

''ரொம்ப சந்தோஷமா இருக்குங்க... உங்க பொண்ணுக்கு என் வயசு இருக்குமா?'' —அவள் கேட்டாள்.
ராஜேஸ்வரியை நடுக்கத்துடன் பார்த்தார்.
''ராஜேஸ்வரி, நீ.... நீ....''
''நான் தப்பாக் கேட்டுட்டேனா?''
அவர் பதிலைத் தேடிக் கொண்டிருந்தார்.
''கேக்கணும் போல் தோணிச்சு... கேட்டுட்டேன்.''
''நான்தானே கேக்கச் சொன்னேன்..'' என்று ஒப்புக்காக ஏதோ பேசினார்.
ஆனால் உள்ளுக்குள் முள்ளை உருட்டின மாதிரி இருந்தது.
''உங்க பொண்ணுக்கு வயசு என்னமோ, ஆனா உங்க வயசுலே எனக்கு ஒரு அப்பா இருந்தார்... இல்லே, இருக்கார்... எங்கேயோ... எப்படியோ...''
''ராஜேஸ்வரி!'' என்றார் நெஞ்சைப் பிழிந்து கொட்டுகிற மாதிரி. மேற்கொண்டு பேச வேண்டாம் என்று கையமர்த்தினார்.
ராஜேஸ்வரி....ராஜேஸ்வரி....
உள்ளம் முழுதும் உச்சாடனம்.



எனக்கு மூத்தவன் மகன். அடுத்த இருவரும் பெண்கள். கடைசி பெண் மிகவும் பயந்தோடும், தூக்கத்தோடும் ஒரு நாள் தயங்கித் தயங்கி என்னிடம் வந்தாள். அவளுக்கு அப்போது வயது ஏழு.
''அப்பா! என்னை என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.
எனக்கு ஒன்றும் புரியவில்லை. ''என்னம்மா, என்ன சொல்றே?''
''ரேடியோலே, தினமும் 'இரண்டுக்கு மேல் வேண்டவேவேண்டாம்' என்று சொல்றாங்களே. நான் மூணாவது குழந்தையில்லையா? அதான் கேக்கறேன். என்னை எங்கேயாவது கொண்டு போய் விட்டுடப் போறேளா?''
அப்படியே அள்ளி அணைத்துக் கொண்டேன் குழந்தையை.
உண்மையிலேயே மருண்டு போய்விட்டிருந்த பிஞ்சு நெஞ்சத்தைத் தேற்றும்போதே எனக்குக் கண்கள் குளமாகிவிட்டன! -கைலாஷ்

பயபக்தி நிறைந்த பார்வையுடன் பகபதி நிமிர்ந்தார். 'போய்வா ராஜேஸ்வரி!' என்று பார்வையால் விடை கொடுத்து வழியனுப்பினார்.
கடைசியாக ஒரு முறை ராஜேஸ்வரியின் முகத்தை அவர் பார்த்துக் கொண்டார். மறக்க முடியுமா?

காலை ஆறு மணி.
கதவு தட்டப்பட்டது.
பகபதி எழுந்து போய்த் திறந்தார்.
புன்னகைச் சிதறலுடன் பூபாலன் நின்றிருந்தார்.
''ஸ்நான பானமெல்லாம் ஆச்சா?''
பகபதி தலையசைத்தார்.
''அப்ப தரிசனத்துக்குக் கௌம்பலாமா?''
''அது ஆயிட்டது.''
''என்ன சொல்றீங்க?''
பகபதி ஒன்றும் சொல்லவில்லை.
புரியாமல் விழித்த பூபாலனைப் பார்த்துப் பகபதி, ''ஓட்டல் பில்லை செட்டில் பண்ணிடுங்க.... நான் நேரே ஊருக்குக் கௌம்பறும்'' என்றார் பணத்தை நீட்டியபடி.
யார் அந்த ராஜேஸ்வரி என்று கேட்க வேண்டும் போல் இருந்தது. கேட்பதற்கு என்ன இருக்கிறது? 'ப்ரெயின் வாஷ்' பண்ணின மாதிரி இருக்கிறது. இல்லை... அப்படிச் சொல்லக் கூடாது. தரிசனம் ஆன மாதிரிதான் இருக்கிறது. அதுதான் சரி!
பகபதி மௌனமாகப் புறப்பட்டார்.

# Kalki Shopping Page

## மெட்ரோபாலிடன்

மாவரைக்கும் இயந்திரங்கள்

- நீடித்த உழைப்பு
- நிகரற்ற அமைப்பு
- உங்கள் இல்லத்திற்கு உறுதுணையானது




அளவுகள் : 1 லிட்டர் முதல் 20 லிட்டர் வரை

**Metropolitan Industries**

72, Sastry Road, Coimbatore-641009

Phone : 32396

## கனகதாரா

மோதிரம்-டாலர்

சக்தி ஜி. சம்பந்தன்

## சாலிடெர் ஸுப்பர் டீலர்






ஏஜென்ஸீஸ் & ஏஜென்ஸீஸ்

ஏர்கண்டிஷன்ட்

18, தெற்கு உஸ்மான் ரோடு,

தி.நகர் சென்னை-17.

போன்: 440004-440725

இறக்குமதி செய்யப்பட்ட "பிலிப்ஸ்" படத்திரையுடன் சாலிடெர் டிவியை அளிக்கிறோம். மிக அதிகபட்சம் தெளிவான படம் இதன் மூலம் காணலாம். விரையுங்கள்! குறிப்பிட்ட அளவே இந்த வாய்ப்பு!

**Solidaire**

**சாலிடெர்**



# குமரி அனந்தனிடம் மிளிரும் பண்பு...

## இருகு பதில்கள்

⌘ எல். கணேசன், திருநெல்வேலி
கே. எந்த புத்தகத்தையாவது படித்துவிட்டு இம்மாதிரி நம்மால் எழுத முடியவில்லையே என்று வருத்தப்பட்டு இருக்கிறீர்களா?
ப: நிறைய. 'என்ன எழுதிவிட்டான்' என்ற அடிப்படையில் படிக்காமல் 'என்னமாய் எழுதியிருக்கிறான்' என்ற நோக்குடன்படிக்கும்போது பல புத்தகங்களில் பல இடங்களில் பல அழகுகளைக் காண முடிகிறது. கருத்தும் சொல்லும் அபாரமாக விழுவதைப் பார்க்கையில் மனத்தில் ஏக்கம் ஏற்படாவிடில் யாரும் எழுத்தாளனாக வர முடியாது. புத்தகங்கள் என்ன, சில சமயம் 'ஆசிரியர் கடித'ங்களிலும் உள்ள சுவையை ரசித்து ஆதங்கப்பட்டு இருக்கிறேன்.

⌘ அசோக் ஜகன்னாதன், செங்கல்பட்டு
கே. ராஜராஜசோழன், அருள்மொழி வர்மன் ஆகிய நேயர்களின் பெயர்கள் உண்மைப் பெயர்கள் என்ற விவரம் கிடைத்ததா?
ப: இதுவரை இல்லை. இதற்கிடையில் ஒரு புதிய நேயர், தன்னுடைய உண்மையான பெயர் ந. அருள்மொழி ராஜராஜ சோழன் என்று எழுதியிருக்கிறார். ஆவடியில் காமராஜநகர், 9வது தெரு 51ம் நம்பரில் வசிப்பவராம் இவர்.

⌘ என். வாசு, திருக்குறுங்குடி
கே. ஏழையையும் பணக்காரனையும் பிரித்து வைப்பது மனமா, குணமா, இனமா?
ப: எதுவும் இல்லை. பணம்தான்.

⌘ க. குமரேசன், திருவாரூர்
கே. குமரிஅனந்தனிடம் மிளிரும் பண்பு நான்கன் யாவை?
ப: என்றும் தொண்டனாக இருக்கும் தலைவர் அவர்.

⌘ இரா. நல்லகண்ணு, கனக்காடு
கே. நடனத்தின் ஓவியத்தாலா, 'கடி'யின் பதிலாலா இப்பகுதி சுவை பெறுகிறது?
ப: பாலினாலா, டிகாக்ஷனாலா எதனால் காப்பி சுவை பெறுகிறது?

⌘ சிவ. பாரதி, சிதம்பரம்
கே. சில வாரப் பத்திரிகைகள் ஏகப்பட்ட இரைச்சல் போடுகின்றனவே?
ப: அவை வாரப் பத்திரிகைகள் அல்ல: அரை வாரப் பத்திரிகைகள். விரைவில் அவை வரா பத்திரிகைகள் ஆனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

⌘ எச். ஆர். சுப்பிரமணியன், திருநெல்வேலி
கே. சமீபத்தில் சிரித்து ரசித்த தமிழ்ப் படம் எது?
ப: தில்லு முல்லு. ரஜனி தவிர வேறு யார் நடித்திருந்தாலும் படத்தை ரசித்திருக்க முடியாது. இதுவே படத்தின் பலம்; படக் கதையின் பலவீனம்.

⌘ வி. மாலதி, உத்திரமேரூர்
கே. ஜனநாயகம் - சரியான விளக்கம் தருக.
ப: இந்த வார்த்தைக்குப் பல பேர் நிறைய பாஷ்யம் செய்திருக்கிறார்கள். இவைகளில் எனக்குப் பிடித்தது ஆபிரகாம் லிங்கனின் விளக்கம். அதைத் தருகிறேன். ''அடிமையாக இருக்க எனக்குப் பிடிக்காது. ஆகவே நான் எஜமானனாகவும் இருக்க மாட்டேன். இதுதான் ஜனநாயகத்தைப் பற்றி என் கருத்து.''

⌘ மேஜர் தாசன், ஈரோடு-10
கே. மோட்சம் என்னும் மரத்திற்கு விதை எது?
ப: நற்காரியங்கள் என்ற பல்லாயிரக் கணக்கான விதைகளைத் தொடர்ந்து விதைத்துக்கொண்டே இருக்க வேண்டும். வாழ்நாள் பூராவும் விதைத்து வளர்க்க வேண்டிய மரம் இது. ஒரே ஒரு விதை போட்டுவிட்டு ஹாய்யாக இருக்கலாம் என்று நினைத்துவிடாதீர்கள்.

⌘ ஆர். சிவராஜ், லால்குடி
கே. பதவிக்காக எதையும் செய்யலாமா?
ப: உங்களுக்கு ஏதாவது பதவி வரும்போது இம்மாதிரி கேள்வியே மனத்தில் தோன்றாது. உங்களுக்கு என்பது எல்லாரையும் குறிப்பிடும்.

⌘ ஆர். ஞானராமன், திருவாரூர்
கே. உங்களுக்கு யாரைக் கண்டால் பிடிக்காது?
ப: என் எழுத்துக்களைப் பாராட்டாதவர்களைக் கண்டால்!

பரிசு பெறுபவர்
எல். கணேசன் 51-ஏ, வடக்குத்தெரு,
மீனாட்சிபுரம், திருநெல்வேலி-627 001








7-4-81

அன்பரே!

நான் உங்களை இப்படி அழைப்பது சரியா? இல்லை, அமெச்சூர்த்தனமாக இருக்கிறதா? நான் உங்களை எதையாவது சொல்லி அழைக்க வேண்டும். டார்லிங்? ஊஹூம். சினிமாத் தனமாகப் படுகிறது. டியர்? இதில் நாடகத்தனம். பின் எப்படி உங்களை நான் கூப்பிடட்டும்? எதையாவதுசொல்லி உங்களைநான் வியங்கோள் வினைமுற்றில் அழைக்க வேண்டும். ஏனென்றால், நீங்கள் என் நானூற்று முப்பத்து மூன்றாம் நாள் கணவர். என் உடலின் மீது சகல பாத்தியமும் கொண்ட மனித ஜீவி. என்னை அதட்ட, சந்தோஷிக்க, அழச் செய்ய....

நீங்கள் என்னை விட்டுப் பிரிந்து சென்ற நான்காவது தடவையின் முதல் நாள் இது. மனத்தில் திக்கென்று ஒரு பயம் விரவி, உச்சந்தலையிலிருந்து ஆரம்பித்து, கீழ் நோக்கிப் போகிறது. தனிமை! சுற்றிலும் மனிதர்கள் இருக்கிறார்கள். இருந்தாலும் நீங்கள் அருகில் இல்லாததால், இந்தக் கறுப்பு ராத்திரி வித்தியாசமாக வாட்டுகிறது. இப்படி என்னுள் எழும் தாபத்தை இந்த டைரியில் எழுதுவதால், 'அதற்காக அலைகிறவள்' என்று த. செய்து எண்ணிவிட வேண்டாம். திருமணமான இந்த ஓராண்டு சில்லறை நாட்களில் நீங்கள்என்னை லென்ன இருட்டில் தொட்டதை விரல் விட்டு எண்ணிவிடலாம். கம்பெனி வேலையாக டூரில் உள்ள உங்களுக்காகக் காத்திருக்கிறேன். என்னை நெகடிவ்வாகவாவது நினைத்துக் கொண்டு இருக்கிறீர்களா?

• • •

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. திறந்தேன். ராபர்ட்!

''ப்பூ! நீதானா மடையா? ஏதாவது விசேஷமா?'' என்று கேட்டேன்.

''ஆமாம் திலீப். ஒரு முக்கியமான விஷயம். உன்னோட உதவி ஒரு பெரிய மனுஷனுக்குத் தேவைப்படுது.''

''பெரிய மனுஷனா?'' நான் சிரித்தேன்.

''என்ன பிரதர் சிரிக்கிறே?''

''பின்னே, என் சகவாசத்தைத் தேடறவன் எப்படிப் பெரிய மனுஷனா இருக்க முடியும்? சரி, விஷயத்தை உடை!''

அவன் உடைத்தான்.

8-4-81

நான் வெறுக்கும் இரண்டாவது ராத்திரி. ராத்திரியைத்தான் நான் வெறுக்கிறேன். உங்களை அல்ல. ஆனால் நீங்கள் எத்தனை நாள் அன்பாக நடந்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களிடம் கான்கிரீட்டாகப் பதிந்து போன முரட்டுத்தனமே என்னை விலகி நிற்கச் செய்கிறது. நான் உங்கள் மனைவி. அந்தரங்கச் சொத்து. ஏன் நீங்கள் இப்படி நடந்துகொள்கிறீர்கள்? என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லையா? என் செல்லுலாய்ட் உடலின் மீது உங்களுக்கு ஆசை இல்லையா?

இன்று தேதி எட்டு. இன்ஷுரன்ஸ் பிரிமியம் கட்ட வேண்டும். காரை எடுத்துக் கொண்டு பாங்கிற்குப் போகிறேன். தனியொரு பெண்ணாக க்யூவில் நிற்கிறேன்.



முன்றால் நீண்ட கோடாக ஆண்கள். அவர்களெல்லாம் தங்கள் மனைவிக்காக இன்ஷூரன்ஸ் கட்ட வந்தவர்களோ என்று நினைத்து அவர்களின் மனைவிகளை எண்ணிப் பொறாமைப்படுகிறேன். நான் ஒரு சாதாரணப் பெண். எனக்கும் சில எதிர்பார்ப்புகள் இருக்கத்தானே செய்யும்?

அம்மா கடிதம் எழுதியிருந்தாள். என், உங்கள் சௌக்கியத்தைக் கேட்டிருந்தாள். பொய்யாகச் சௌக்கியமென்று பதில் எழுதும்போது என்னுள் வறட்டுச் சிரிப்பு.

● ● ●

மவுண்ட் ரோடு. பச்சைச் செடிகள் விரிந்த ஓட்டல் மாடி. சுறுசுறுப்பான நாட்டியத்துடன் பேரர்கள் குறுக்கும் நெடுக்கும் தூதுவர்களாய்ப் போய் வர, கைபிடித்து இழுக்காத குறையாக வலது பக்க சேருக்கு என்னை ராபர்ட் தள்ளிக்கொண்டு போனான். என்னிடம் சில நூறு ஆச்சரியக்குறிகள்.

''டேய், யாரையோ பார்க்கப் போறோம் என்று சொன்னியே?''

''ஆமாம். பார்க்கத்தான் இங்கே உட்கார்ந்துகிட்டு இருக்கோம்.''

''இங்கேயா?''

''ஆமாம். இங்கேதான். தனியா நின்னுக்கிட்டு யோசித்தால் நம்ம தேசத்து ஜனங்களுக்குச் சந்தேகம் வரும். கூட்டத்திலே கொலையே செய்தாலும் கண்டுக்க மாட்டாங்க.''

நகரத்துமக்களை அவன் துல்லியமாகப்படித்து வைத்திருந்தான். பேரரிடம் ஆர்டர் செய்தான். ''இவீப் டைம் எத்தனை?''

# குழப்பம்

## வினுதா

சொன்னேன். ''எங்கேடா அந்த ஆள்?''

''இன்னும் பத்து நிமிஷத்திலே வந்திடுவார்'' என்றான். பத்து நிமிடம் போனது. வந்தார்.

9—4—91

உங்களுக்காகவே வாசலில் வெகு நேரம் காத்திருந்தேன். நீங்கள் வரவில்லை. ஆபீஸ் வேலையாக மெட்ராஸ் போனது இன்னும் முடியவில்லை போலிருக்கிறது. என்ன ஆபீஸோ இழவோ? சற்றுச் சலிப்பாகக் கூட இருந்தது.

இன்று மதியம் வீட்டுக் கேட்டருகே ஒரு பிச்சைக்காரி கைக்குழந்தையுடன் நின்று கொண்டிருந்தாள். அவள் குழந்தை, அள்ளிக்கொள்கிற மாதிரி அப்படியொரு அழகு! உங்களுக்குச் செய்து வைத்திருந்த பாஸந்தி, கட்லெட், வி. பிரியாணி அத்தனையும் அள்ளி அவளுக்குப் போட்டேன். அவள் போன பிறகும் குழந்தை ஞாபகமாகவே எனக்கு இருந்தது.

'ஸ்வப்னா, அதுக்குள்ளாற குழந்தைக்கு என்ன அவசரம்?'

அந்தப் பிச்சைக்காரி மீது எனக்குப் பொறாமையாகக் கூட இருந்தது. ஒருவேளை, அகாலமாக இறந்துபோன உங்கள் முதல் மனைவியையே மனத்துக்குள் நினைத்துக் கொண்டு இருக்கிறீர்களா?

எதிரே உதித்த இளைஞனுக்கு இருபத்தெட்டிலிருந்து இருபத்தொன்பதுக்குள் இருக்கலாம். அம்மா தந்த பிச்சை

சிவப்பு. சின்னக் கண்கள், ஒற்றை நாடி. மெல்லிய அழுத்தமான உதடுகள். மேலே நேர் கோடாக மீசை. ஏதோ தீர்க்கமான முடிவுக்கு வந்தவன்போல் தென்பட்டான்.

ராபர்ட், ''சார்! நான் சொல்லலே, அது இவர்தான் சார். திலீப்புன்னு பேரு. சார், உங்க பிரச்னையை நேரடியாக நீங்களே திலீப்கிட்டே பேசிக்குங்க. நான் தேவையில் லேன்னு நினைக்கிறேன். ஒரே ஒரு வார்த்தை! திலீப் ஒரு ஜீனியஸ். நீங்க எதுக்கும் அவனை நம்பலாம்.'' ராபர்ட் எங்களை வெட்டி விட் டுப் புறப்பட்டான்.

அவன் என்னைச் சில கணங்கள் உற்றுப் பார்த்தான். சிக்கனமாக ஒரு சிரிப்பை உதறி விட்டு, ''மிஸ்டர் திலீப் விஷயத்தைச் சொல்கிறேன். முடியுமான்னு பாருங்க'' என்றான்.

''ஓ.கே. நான் உங்களுக்கு என்ன செய்ய ணும்?''

''ஒரு கொலை செய்யணும்!''

''கொலை?''

''ஏன் பயமா இருக்கா?''

''பயமா? எனக்கா?'' எனக்குச் சிரிப்பு வந்தது. ''நோ. என் மனைவி வத்சலாவை என்னிக்கு நான் கொலை செய்தேனோ அன் னிக்கே என் பயம் போயிடுச்சி மிஸ்டர்!''

''மனைவியைக் கொலை பண்ணினீங்களா? ஏன்?''

ஜே. கே. திலீப், மானேஜர் — ஜோஷி அண்டு கோ. என்று அறிவித்த கதவை மெல்லத் திறந்தேன். உள்ளே இரண்டு பேர் சிரிக்கும் சப்தம் கேட்டது. வத்சலா கூடச் சிரிப்பது யார்? ஆண் சிரிப்பாகத் தெரிந்தது. பூனையாகக் கால்களைப் பதித்து அந்தக் கத விடுக்கில் பார்வையை ஓட்ட... எதிரே மாடி வீட்டு இளைஞன் என் மனைவியின் உடைகளைச் சட்டென்று உதறிவிட்டுத் தோள்களைப் பற்றிப் படுக்கையில் சரிக்க, அவளும் சம்மதித்தவளாகத் தயாரானாள்.

''ஒரு மோசமான காரணத்துக்காக அவ ளைக் கொலை செய்தேன்.''

''அப்புறம்?''

''ஜெயில். ஏழு வருஷம்.''

அவன் எனக்காக வேதனைப்பட்டதாகத் தெரியவில்லை. சட்டென்று விலகிச் சொந்த சாம்ராஜ்ய விஷயத்தில் மூழ்கி, திரும்பி வந்தான்.

''ஆமாம், நீங்க யாரைக் கொலை செய்ய ணும்னு சொல்லலையே?''

''என் மனைவி ஸ்வப்னாவை!''

**10-4-81**

என்னை வாட்டும் நான்காம் நாள். தேதி யைப் பார்த்தேன். பத்து. எதிர்பார்த்தபடி என்னை உறுத்தும் அந்தக் கடிதம் வந்தது. என் திருமணத்துக்குப் பிறகு மாதந்தோறும் தவறாமல் வரும் கடிதம். டைப்ரைட்டர் எழுத்துக் கடிதம். என்னை முத்தமிட, என் னைத் தழுவ, என்னைப் படுக்கையில் சரிக்கத் துடிக்கும் எழுத்துக்கள்.

அந்தக் கடிதத்தை வழக்கம்போல் படிக் காமல் வம்பர் அறையில் வீசினேன். சட் டென்று எனக்கொரு சந்தேகம். முந்தைய இம்மாதிரியான கடிதங்களை அவர் படித் திருப்பாரோ?

• • •

நான் அவனைச் சில விநாடி ஆச்சரியத் துடன் பார்த்தேன். மனைவியைத் தீர்த்துக் கட்டச் சொல்கிறானே? ஏன்? அவள்மீதிருக் கும் நகை, பணம் இதற்காகக் கொலை பண் ணச் சொல்கிறானே? இல்லே, அவன் மனைவி யும் வத்சலா மாதிரியா?

''ஏன் உங்க மனைவியைக் கொலை பண்ணச் சொல்றீங்க?''

''திலீப், என் மனைவி ஸ்வப்னா சமீப கால மாக இன்னொருத்தனுக்கும் மனைவியா நடந்துக்கறா!''

''இதைப் பற்றி உங்க மனைவி கிட்டே ஏதாவது கேட்டீங்களா?''

''இதென்ன, பேரம் பேசக் கூடிய விஷயமா?''

''அப்போ, உங்களுக்கு நீங்களே நீதிபதியா மாறிட்டீங்க.''

''ஷட் அப். இது என் சொந்த விஷயம்.''

''மிஸ்டர் அருண், கோபப்பட வேண் டாம். இதே காரணத்துக்காக என் மனைவி யைக் கொலை செய்தவன் நான். ஆனால் உங்களைப் போல மூன்றாந்தர யூகத்திலே நான் அந்த முடிவுக்கு வரலே. கண்ணாலே பார்த் தேன். அப்புறம் அவளைத் தீர்த்தேன்.''

அவன் கோபமாக என்மீது சீறினான். ''உன் அட்வைஸ் எனக்குத் தேவையில்லே. இந்த விஷயத்திலே நீ ஒரு அம்பு. நான் வீசப்

**மாஸ்கோவில் நடைபெற்ற ஒலிம்பிக் விளையாட்டு போட்டி யின்போது நான் தங்கியிருந்த அறையின் வாடகை நாள் ஒன்றுக்கு ரூ 600. ஆனால் அதே அறை ரஷ்யருக்குத் தரப் பட்டால் வாடகை ரூ 60 தான்.**

— இந்திய சுற்றுலா வளர்ச்சி வாரியத் தலைவர் எஸ். கே. மிஸ்ரா

ஆதாரம் : புரோப்
தலைவர் : கோ. க.



# உங்கள் அழகுக்கு அழகூட்டும் குங்குமம்

## புதிய சுமங்கலி டீலக்ஸ் குங்குமம்

இன்று தன் இயற்கை எழிலை எந்த மங்கையும் மேலும் பொலிவுறச் செய்யலாம். உங்கள் ஒப்பனைக்கு மேலும் மெருகூட்டுவது சுமங்கலி குங்குமம்.

கொஞ்சம்கூட வெளியே சிந்தாத சிறந்த பாக்கிங்கில் வரும் குங்குமம் அது ஒன்றே. ஆகவே அது உங்கள் கைப்பையிலோ அல்லது டிரஸ்ஸிங் டேபிள் மேலோ வைத்துக்கொள்ள உகந்தது. சுமங்கலி உங்களுக்குப் பிடித்தமான பலவித வண்ணங்களில் கவர்ச்சியான ஜாடிகளிலும், பௌடர் உருவிலும் மற்றும் டீலக்ஸ் பர்ஸ் பாக்கிங்குகளிலும் கிடைக்கிறது.




டீலக்ஸ் ● குங்குமம்

**சுமங்கலி**

ஒரு கேசவர்த்தினி தயாரிப்பு

OBM 4952/TM



நண்பர்: ஏங்க, ஹோட்டலில் இருக்கிற மாவு அரைக்கிற கிரைண்டரை வித்துடப் போறீங்களாமே, ஏன்?

ஹோட்டல் முதலாளி: பின்னே என்னங்க? காசில்லாம சாப்பிட்டுட்டு மாவு அரைச்சுக் கட்டாண்ணும் அவனவன் சந்தோஷமா கேட்கிறாங்களே!

ஏ. கே. சங்கர்

போறவன். இந்த விஷயத்தை நீ முடிச்சுக் கொடுத்தா ஐயாயிரம் தர்றேன். இந்தா அட்ரஸ்!''

11-4-81

நேற்றைய நினைவு இன்று வலுப்பெற்று விசுவரூபமெடுத்து மனத்தை வியாபிக்கிறது. அந்த அனாமதேயக் கடிதங்களைப் பற்றி இதுவரை அவரிடம் சொல்லாதது தவறோ என்று நினைக்கிறேன். சொல்லியிருந்தால் பாசிட்டிவ்வாக எடுத்துக்கொண்டிருப்பாரே? எனக்குச் சற்றுக் குழப்பமாக இருக்கிறது. குழப்பம் மேலும் எழுதுவதை நிறுத்துகிறது.

• • •

பெங்களூர், ஜெயநகர்.

அருண் கொடுத்த அட்ரஸில் ஒரு குட்டி பங்களா சுத்தமாக நின்று கொண்டிருந்தது.

நான் திரும்பவும் அந்தப் பங்களாவின் மீது படையெடுக்கும்போது மணி பதினொன்று. பக்கவாட்டு ஜன்னல் கம்பிகளை அன்பாகத் துண்டித்து உள்ளே நுழைந்தேன். கறுப்பு இருட்டு. தட்டுத் தடவி ஸ்விட்சைப் போட்டேன். அறை பிரகாசமானது.

ஒவ்வொரு அறையாக நுழைந்து வெளியே வந்தேன். பணவோட்டம் தாராளமாகவே இருந்தது. திரும்பி வந்து பீரோக்களை நெருங்கினேன். அவை முரண்டு பண்ணாமல் திறந்து கொண்டன.

தலையை உயர்த்தியபோது புடவைக்குள் லேசாக மறைந்தபடி அந்தக் கருநீல வண்ண டைரி எட்டிப் பார்த்தது. எடுத்தேன். ஸ்வப்னாவோட டைரி! பிரித்தேன். கடைசி சில தினங்களின் வரிகளை அளைந்தேன்.

7-4-81. அன்பரே! நான் உங்களை இப்படி அழைப்பது சரியா?... என் கணிப்பு சரியாக இருந்தது. ஒரு தமிழ்ப் பெண்ணைப் போல், அவள் தன் கணவனுக்காகக் காத்திருந்தாள். இவளையா ராஸ்கல் கொல்லச்சொல்லி என்னை ஏவி இருக்கிறான்? எனக்கு என் செயல் சரியெனப் படவில்லை. மெல்ல பின்வாங்கினேன். அருண் கேட்டால் அட்வான்ஸை அவன் முகத்தில் வீசிவிட்டு, அவன் மனைவியை ஜாக்கிரதையாக உசுப்பி, ''உன் கணவனின் சுயரூபத்தைப் பார்!'' என்று காட்டிவிட வேண்டியதுதான். பலன்? மனத் திருப்தி.

புறப்படத் திரும்பினேன். பரந்த கட்டிலின் மீது மடிந்து கிடந்த என்னவோ நிற ஜீன்ஸ் பேண்ட் என்னை அடித்து நிறுத்தியது. யாருடையது இது? வாட்ட சாட்டமான ஒரு இருபத்தாறு வயது வாலிபனுடையதுபோலப் பட்டது. அருணுடையதா? எடுத்துப் பார்த்தேன். சற்றுப் பெரியதாக இருந்தது. நிச்சயமாக இது ஒற்றைநாடி அருணுடையதல்ல. பின்?

எங்கோ நான் தவறு செய்து விட்டது போலப் பட்டது. அருண் கூறுவதுதான் சரியோ? அந்த டைரி! ஒரு சமயம் பொய்யான வாசகங்களை அது கூறுகிறதோ? பொதுவாகக் குற்றம் செய்பவர்களுக்கு மூளை சுறுசுறுப்பாக வேலை செய்யும் என்பார்கள். அதுபோல் கணவனை ஏமாற்ற இப்படி ஒரு டைரி நாடகம் ஆடுகிறாளோ ஸ்வப்னா? என் யூகம் தவறென்றால், கணவன் இல்லாத நேரத்தில், இந்தப் பன்னிரண்டு மணியில் எங்கே அவள்? அப்புறம் அந்த பேண்ட் யாருடையது?

நான் சற்று யோசித்தேன். சிகரெட் பற்ற வைத்தேன். காத்திருந்தேன்.

ரொம்ப நேரம் கழித்து கார் சப்தம் கேட்டது. நான் சுறுசுறுப்பானேன். கேட்டைத் திறப்பது யார்? ஸ்வப்னா? அவளாகத்தான் இருக்கவேண்டும். ஸ்டீயரிங்கைப் பிடித்தபடி டிரைவர் ஸ்தானத்தில் ஒரு சின்ன இளைஞன். எனக்குப் புரிந்தது. ஓஹோ... கணவன் இல்லாத ராத்திரியில் இவனுடன்தான் கைகோத்துக் கொண்டு கொட்டமடிக்கிறாளா? இவன்தான் அந்தக் கடிதக் கதாநாயகனா? துரோகம் செய்யத் தூண்டும் இவனை முதலில் ஒழித்துக் கட்டினால் என்ன? அப்புறம் ஸ்வப்னா! என் கோபம் அவன் மீது திரும்பியது.

''ஸ்வப்னா, நான் காரை ஷெட்டில் தள்ளி விட்டு வருகிறேன். நீ வீட்டைத் திற'' என்றான் இளைஞன்.

ஸ்வப்னா வீட்டை நோக்கி நடக்க, நான் கார் ஷெட்டின்வலப்பக்கத்திலிருந்து வெளிப்பட்டு, இன்னும் சில விநாடிகளில் உயிரிழக்கப் போகும் அந்த முகம் தெரியாத இளைஞனுக்காகக் காத்திருந்தேன். அவன் காரை விட்டு விட்டு வெளியே வந்தான். நடந்தான். நான் பின்னால் சென்று, தயாராக இருந்த நைலான் கயிறை அவன் கழுத்தில் இட்டு, ஒரு இறுக்க்.

''ஸ்வொ....ப்....ன்ன....!'' அவனுடைய கடைசி சப்தம். சப்தத்தைக் கேட்டு ஓடி வந்த ஸ்வப்னா, கீழே சரிந்து கிடந்த உடலைப் பார்த்தாள். என்னைப் பார்த்தாள்.

அடுத்த கணம் வீறிட்டாள்: ''அண்ணா!''

'அண்ணனா?' நான் ஆச்சரியமாகி நின்றேன்.

# அந்தி நேரத்து உதயங்கள்

## வாஸந்தி

எழுதும்
புதிய தொடர்

**கல்கி** 5-7-'81 இதழில்
ஆரம்பமாகிறது

# எழுதியது யார்? போட்டி முடிவு

| சரியான விடைகள் : கதை: | எழுத்தாளர் : |
|---|---|
| 1. ருக்குவின் கல்யாணம் குறைவின்றி நடக்கும் | ஷைலஜா |
| 2. இரண்டு இஜாட்டர்கள் | பட்டுக்கோட்டை பிரபாகர் |
| 3. ராமனிருக்குமிடம் | அனுராதா ரமணன் |
| 4. பழைய முகங்கள் புதிய நிழல்கள் | அரவிந்தன் |

நான்கு கதைகளை உருவாக்கிய நான்கு எழுத்தாளர்களின் பெயர்களையும் சரியாக கணித்து எழுதிய 59 வாசகர்கள் ரூ. 500 பரிசுத் தொகையைப் பகிர்ந்துகொள்ளுகிறார்கள்.

1. இரா. அமுதன், மதுரை. 2. டி.வி. சரசுவதி, தச்சநல்லூர். 3. என். ஜெய சங்கரன் (விலாசமில்லை.) 4. என். நல்லதாய், பெரியம்நியாக்கூடலூர். 5. கே. பொன்னு சாமி, பூனா. 6. முத்தம்மா சேரந்தையா, சிவகாசி. 7. க. சாமிநாதன், கோனேரி ராஜபுரம். 8. பவானி நாராயண், புது தில்லி-22. 9. வி. ஜயந்தி, மேலூர், மதுரை. 10. ஜெ. ஜெயகீதா, காரைக்கால். 11. வசந்தாராகவன், ஸ்ரீரங்கம். 12. எஸ். சாந்தி, மாயூரம். 13. கே. எஸ். வாகீஸ்வரி, மதுரை-9. 14. கே. அசோகராஜா, தூத் துக்குடி-3. 15. கே. மங்கையர்க்கரசி, திருக் கழுக்குன்றம். 16. வி. எஸ். மூர்த்தி, நாட் டுக்கல், பாலக்காடு. 17. விசாலம், மதுரை-6 18. பி. ஜெயலட்சுமி, ஒரத்தநாடு. 19. பி. காளிமுத்து, சுகந்தலை. 20. என். ராஜாத்தி, பொள்ளாச்சி. 21. ஏ. சுப்பு ராம், சித்தோடு. 22. ஆர். ரேவதி, கோவிந்தம் பாளையம். 23. கே. சுப்பராமன், பெஸ் டம் ஸாகர், பம்பாய். 24. மா. கலோசனு தங்கம், மலையம்பாளையம். 25. நா. சுப்பிர மணியம், கடலூர்-1. 26. எம். தங்கம், திருச்சி-20. 27. ரா. ராஜேந்திரகுமார், புதுப்பாளையம். 28. க. இலகா, பம்மல், சென்னை-75. 29. டி. வி. சொர்ணகுமார், கோவில்பட்டி. 30. ஆர். ராஜாராம், மதுரை. 31. முத்துலட்சுமி, கோவில்பட்டி. 32. பி. துரைசாமி, சேலம். 33. எம். ஏ. காதர், விருத்தாசலம். 34. கே. புஷ்பா, மணச்சநல்லூர். 35. ஆர். எஸ். மாதவன், பம்பாய்-400076. 36. பெ. க. தியாக ராஜன், அருப்புக்கோட்டை. 37. எஸ். ராதா, காஞ்சீபுரம். 38. புஷ்பலதா நந்த கோபால், அனகாபுத்தூர். 39. கே. வெங் கடேசன், ராமநாதபுரம். 40. கீதா விசுவ நாதன், பாலக்காடு. 41. ஆர. சுப்பிரமணி யன், புதுக்கோட்டை. 42. என். கனக லட்சுமி, தூத்துக்குடி-2. 43. வி.ஜி. நேசன், சென்னை-61. 44. ஸ்ரீமதி லீலா மூர்த்தி, கல்கத்தா-26. 45. எம். கணேஷ், பொள் ளாச்சி. 46. ஆர். ஹேமா, சென்னை-42. 47. சுந்தரி சீனிவாசன், கடலூர். 48. எஸ். ராஜலட்சுமி, தஞ்சாவூர். 49. வி. ராதா, பெட்டவாய்த்தலை. 50. வி. ஹரி ஹரன், தருமபுரி. 51. ஆர். எம். லட்சு மணன், கோயமுத்தூர்-9. 52. வி. கமலா, ஈரோடு. 53. வி. பட்டம்மாள், காமாட்சி புரம். 54. என். வேணுகோபாலன், ஆங் கரை. 55. கமலா சுப்பிரமணியன், புதுதில்லி 56. ஆ. ஆண்டி, எம்.ஏ., திருப்பத்தூர். 57. ச. பழனிவேலு, சங்கரன்கோவில். 58. அரிகரபுத்திரன், மதுரை. 59. ஸ்ரீமதி வெங்கட்ராமன், வத்தலக்கரை.





# கல்கி வீட்டுக் கல்யாணம்

## ரசிகமணி ரசித்த மணிகள்





- கல்கி வீட்டுக் கல்யாணத்தில் டி.கே.சி., கவர்னர் பவநகர் மகாராஜா
- கல்கி வீட்டுக் கல்யாணத்தில் கவர்னர் ஜெனரல் அருகே முதல்வர் பி.எஸ். குமாரசாமி ராஜா



**மீ.ப.சோமு**

டில்லியிலிருந்து கவர்னர் - ஜெனரல் ராஜாஜி 1949 மே மாசம் தமிழகத்துக்கு வந்து போனார். அவர் எந்த நிகழ்ச்சிக்காக வந்தாரோ அந்த நிகழ்ச்சிக்கு ஒப்பாகவே வேறு இரண்டு நிகழ்ச்சிகள் தமிழ்ப் பத்திரிகைகளில் ஒரு கலகலப்பை உண்டாக்கின!

ராஜாஜி அப்போது தமிழகத்துக்கு விஜயம் செய்தது திருவண்ணாமலைக் கோவிலில் ரமண மகரிஷிகள் இளமைக் காலத்தில் தவம் புரிந்த பாதாள லிங்கக் குகையைத் திறந்து வைப்பதற்காக! இந்த நிகழ்ச்சியோடு கூடவே தமிழ் மக்களின் கவனத்தைக் கவர்ந்தன வேறு இரண்டு நிகழ்ச்சிகள்.

ஒன்று அதே திருவண்ணாமலையில் நடந்தது. மற்றது சென்னையில் நடந்தது. இரண்டும் திருமண நிகழ்ச்சிகளே!

ஆம்; திருவண்ணாமலையில் ராஜாஜி தங்கியிருந்த சிறப்பு ரயில் பெட்டி அறைக்குள் பெரியார் ஈ. வே. ரா. ராஜாஜியைச் சந்தித்து ஒரு பெரிய இரகசிய ஆலோசனை நடத்தினார்! இது என்ன என்பதற்கு மிகப் பெரிய ஹேஷ்யங்கள் பத்திரிகைகளைக் கலக்கிக்கொண்டிருந்தன. பிறகுதான் அது பெரியார் அவர்களின் சொந்த விஷயம் என்றும், தமது திருமணத்தைப் பற்றிப் பெரியார் தம் உற்ற நண்பரான ராஜாஜியிடம் கலந்து முடிவு எடுத்தார் என்றும் வெளி உலகுக்குத் தெரிய வந்தது.

மற்றொரு நிகழ்ச்சி கல்கி அவர்களின் மகள் ஆனந்திக்கும், சதாசிவம் அவர்களின் சகோதரி பிள்ளை ராமச்சந்திரனுக்கும் (அம்பி) கல்கி பூங்காவில் நடைபெற்ற திருமணம். இந்தக் கல்யாணத்துக்கு டிகேசி வந்திருந்தார் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை.

திருமணம் எத்தனை கோலாகலமாக இருந்தது என்பதைத் திருக்குற்றாலம் திரும்பியதும் டி.கேசி. கல்கி அவர்களுக்கு எழுதின கடிதம் பேசுகிறது. ஆனந்தியின் கலியாணம்என்பதல்ல, இந்தக்கடிதத்தை வெளியிடுவதன் நோக்கம்! காவியங்களைரசிக்கிறஇதயம் ஒருநண்பர் வீட்டுக் கல்யாணத்தை

இந்த வார டீ.வி. சினிமா

# காளி

**சாவி:**

ஐ.வி. சசி தமிழில் வேறூன்ற ஆரம்பித்திருக்கிறார். சினிமாஸ்கோப்பில் கலரைக் குழைத்து மெய்சிலிர்க்க வைத்திருக்கிறார்கள். சில இடங்களில் புருவத்தை உயர்த்திவிடுகிறார்கள்.

படத்தின் பெயர் காளி. ஹீரோ ரஜனிகாந்த். ஏதோ பழிவாங்கும் பட(ல)ம் என்று ஊகித்து விட்டீர்களானால் உங்களுக்கு ஐ.வி. சசியைவிட ஐ.க்யூ அதிகம்.

பாடல்களில் எது கண்ணதாசனுடையது எது முத்துராமலிங்கத்தினுடையது என்றே வித்தியாசம் தெரியவில்லை. எல்லாமே மோசம்.

**தேவி:**

ஷோலேயில் கடன் வாங்கிச் சாமர்த்தியமாகச் சட்டை தைத்துப் போட்டிருக்கிறார். அட்டகாசமான ஜிகினா வேலைகள் கண்களைப் பறிக்கின்றன. என்றாலும் 'ஒரிஜினல்' இல்லையே.

கார்கள் மீது மோட்டார் சைக்கிள் செல்வதும், ஓடும் ரயிலைத் தாண்டுவதும் 'த்ரில்' தான். அடேங்கப்பா அந்த நெருப்புக் காட்சி....! அசத்திவிட்டார்கள்.

**ராணி:**

அகன்ற திரைப்படம் என்பதாலோ நட்சத்திரக் கூட்டம் அதிகம்?

ரஜனிகாந்த் காளியாக வருகிறார். ரஜனி என்றாலே, காட்சிக்குக் காட்சி சண்டை என்றாகிவிட்டது. சண்டைக் காட்சிகளில் புகுந்து விளையாடியிருக்கிறார். அக்காள் குழந்தைகளை நினைத்து உருகும்போது, நடிப்பையும் காட்டுகிறார்.

சண்டைக் காட்சிகளில் ஒன்று இரண்டைக் குறைத்துக் கொண்டு ஒரிரு காதல் -சிரிப்புக் காட்சிகளைப் புகுத்தியிருக்கலாம். 'பத்ர காளி' என்ற பாட்டும் ஆட்டமும் படத்தின் தரத்தைக் குறைக்கின்றன. சண்டைப் பிரியர்களுக்கு விருந்து.

தொகுப்பு: சிக்கி



எப்படி ரசிக்கிறது என்பதே முக்கியம்! அதிலும் கம்பர் பாடலை எடுத்தாண்டு கடிதத்துக்கு முத்தாய்ப்புக் கொடுத்துள்ள பாங்கு எப்படி ஓர் இலக்கியத் தரத்தைக் கொடுக்கிறது என்பதைப் பாருங்கள் :—

அருமை நண்பர் கல்கி அவர்களுக்கு,

பயணம் சௌகரியமாகவே இருந்தது. குற்றாலத்து அருவி குறைவாக விழுகிறது. 'கியூ' வைத்துக் குளித்துக் கொள்ளலாம்! ஆனால் காற்று சுகமாகக் குளிர்ந்து வீசுகிறது. இதையே தென்றல் பருவம் என்று சொல்லலாம். இன்னும் பத்து நாளில் சாரல்பருவம் வந்துவிடும்.

ஆனந்தி, அம்பி (ராமச்சந்திரன்) தங்கம், அனந்த் மற்றும் எல்லோரும் வந்து சாரலைக் கௌரவப்படுத்த வேண்டும். இதுவரையும் பராமுகம் பண்ணியது போதும்!

கல்யாணத்தின் கோலாகலமும், இருந்தவர்கள், வந்தவர்கள் எல்லாருடைய மகிழ்ச்சியும், மனசில் வந்து ஊடாடிக் கொண்டே இருக்கின்றன.

ஆனந்தி கல்யாணம் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியே இருந்தது. ராஜாஜிக்குமே மிக்க திருப்தி!

அவர்கள் வந்து சிறப்பித்தார்கள் என்றால் ஏதோ வந்தார்கள், விருந்துண்டார்கள், தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள் என்று மாத்திரம் அல்ல; தமிழ்நாடு முழுவதுமே அவர்களையும் கலியாணத்தையும் ஒட்டிப் பார்த்து அனுபவித்தது என்று சொல்ல வேண்டும்! டில்லியிலிருந்தும் பம்பாயிலிருந்துமே வந்தவர்கள் எல்லாருக்கும் அப்படி ஒட்டிப் பார்த்து அனுபவித்ததில் ஒரு தனியான திருப்தி.

ராஜாஜி டில்லியிலிருந்து வந்து, இரும்பியும் வடக்கு முகமாகப் போனது, விசுவாமித்திரர் அயோத்திக்கு வந்து, மிதிலைக்குப் போய், அங்கே ராமன் —சீதை கலியாணத்தை நடத்திவிட்டு வடமுகம் நோக்கிப் போனார் என்ற கம்பர் கவி ஞாபகத்துக்கு வருகிறது!

கோ[illegible]ய மணவாளனும்
சனகன் தரு குயி[illegible]லும்
நாளுவிதம் வருபோகமே
[illegible]கர்கின்றஅந் நாள் வாய்
ஆறுமறை நெறிஆசிகள்
முனிகோசிகன் அரு[illegible]ளிப்
போ[illegible]ன்வட திசைவாய், உயர்
பொன்மால்வரை புகு வான்

ராஜாஜி விஜயம் செய்ததும், மற்றும் விமரிசைகளும், பெரும் விருந்தளிப்பும், எல்லாம் சேர்ந்து, தம்பதிகளை, தங்களை, ருக்மணி அம்மா[illegible] (கல்கி மனைவியார்) எம். எஸ்.[illegible] சதாசிவத்தை என்னையுமே மிக்க கௌரவத்துக்கு [illegible]ள்ளாக்கி விட்டன.

நாம் எல்லோரும் சேர்ந்து வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டிய ஆனந்தத்தில் இது ஒரு முக்கியமான அம்சம்.

ரொம்ப திருப்தி.

இதுவரையும் நமக்கு அருள் செய்து வந்த இறைவனது திருவருள் இனியும் அருள் செய்து நம்மை மேம்படுத்துமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்.

அன்புடன்

டி. கே. சிதம்பரநாதன்




● 14–6–81 கல்கி இதழ் அட்டையில், ஓவியர் உமாபதியின் கார்டூனால் ஏற்பட்ட சிரிப்பும், வண்ணப் படத்தின் அழகால் ஏற்பட்ட மகிழ்ச்சியும் உள்ளே இருந்த இரு கட்டுரைகளைப் படித்ததும் பறந்துவிட்டது.
கெங்கவல்லி கி. முருகவேள்

● நாளைய செல்வங்களான 651 பிஞ்சு நெஞ்சங்களின் படிப்போடு விளையாடும் செய்தியைப் படித்ததும் இதயம் வேதனையில் விம்மியது. நானும் அவர்களுக்காக இயேசுவிடம் வேண்டிக் கொண்டேன்!
கண்ணம்பாளையம் ஷீபா

● மந்தைவெளி, செயின்ட் ஜான் மிடில் ஸ்கூல் மாணவியின் பேட்டி பார்த்தேன். கல்வி வியாபாரமாக மாறுவதை என்றுமே கல்வித் துறை அனுமதிக்காது. இரகசிய விசாரணைகள் இருப்பதால் மேற்கொண்டு நான் ஒன்றும் கூற விரும்பவில்லை. அந்தப் பள்ளியில் பணியாற்றிய அனைத்து ஆசிரியர்களுக்கும் அருகில் உள்ள மற்ற தனியார் பள்ளிகளில் வேலை கொடுக்கப்பட்டுள்ளது.

அந்தப் பள்ளிக்கூடத்திலிருந்து பள்ளி நிர்வாகத்தினரால் டி. ஸி. கொடுக்கப்பட்ட மாணவ, மாணவிகளுக்கு அருகில் உள்ள மற்ற பள்ளிகளில் (மொத்தம் 477 மாணவ மாணவியர்தான்) இடம் வாங்கிக் கொடுக்கப்பட்டு விட்டது. இன்னும் சில மாணவருக்கு இடம் கிடைக்கவில்லையென்றால் மயிலாப்பூர் சரகப் பள்ளித் துணை ஆய்வாளர் இளங்கோ (தேனாம்பேட்டை காவல் நிலையத்துக்கு எதிரே வி. எஸ். கோவில் தெருவில் உள்ள பள்ளித் துணை ஆய்வாளர் அலுவலகத்தில்) அவர்களையோ என்னையோ சந்தித்தால் உதவக் காத்திருக்கிறோம்.
சென்னை-8 வி. ரமணி
(மாவட்ட கல்வி அலுவலர், தென் சென்னை)

● இரட்டை வேடத்தில் நடிப்பதில் தமிழ் திரை உலகில் எம். ஜி. ஆரை வெல்ல இது வரை யாரும் வரவில்லை. அரசியல் இரட்டை வேடத்திலும் அவருக்கு நிகர் அவரே. கார்டூனில் அவரது நடிப்பு ஏ-ஒன்!
தூத்துக்குடி இரணியல் 'கலை'

● பங்களா தேசத்தில் இன்றுள்ள அரசியல் அவல நிலைமை என்ன என்பதைக் கார்ட்டூன் வெளிப்படுத்தியிருக்கும் விதம் பிரமாதம்!
இடவாக்குடி இடலை எம்.ஏ. அன்வர்

● 'ஜெய் பங்களா' சாதாரணத் தலையங்கமாக இல்லாமல் ஜனநாயகத்தை விரும்புபவர்களின் குரலாக, அராஜகத்தை எதிர்ப்பவர்களின் சக்தி மிக்க குரலாக ஒரு பொறுப்புள்ள இந்திய தேசத்துக் குடிமகனின் குரலாக ஒலிக்கச் செய்திருக்கிறீர்கள்.
நங்கநல்லூர் கே. எம். பாரூக்

● 'குட்டிகிருஷ்ணன்' மொழிபெயர்ப்பில் வெளியான டி.ஏ. பை அவர்களின் 'நாம் ஏன் ஏழைகளாக இருக்கிறோம்?' என்ற கட்டுரை படிக்கும்போது சற்று அதிர்ச்சியாகத்தான் இருந்திருக்கும் பலருக்கு. உண்மை கசக்கத்தானே செய்யும்?
ஈரோடு-10 அமிர்தா செளந்தரராஜன்

● பாலைவனச் சோலையில் இடம் பெறும் இரு நல்ல பாடல்களுக்கு வானொலியில் விதிக்கப்பட்ட தடையைக் கண்டு நான் ஆத்திரமடைகிறேன். சொற்ப சன்மானத்துக்காக ஏன் படத் தயாரிப்பாளர்கள் வெட்கம் கெட்டு வானொலியிடம் பாடல்களை ஒலி பரப்பும் உரிமையைத் தரவேண்டும்?
வேலூர்-2 கே. அழகன்

● அகில இந்திய ரேடியோ ஏற்கெனவே ஒலிபரப்பி வருகின்ற பச்சையான ஆபாசப் பாடல்களையும் கம்யூனிஸ சித்தாந்த பாடல்களையும் பட்டியல் போட்டுத் தருகிறேன். அவை அனைத்தையும் வானொலி நிலையத்தார் தடை செய்யத் தயாரா?
கிழக்குத் தாம்பரம் பி. ஜி. அசோக்குமார்

● தேசிய விருதுக்கான திரைப் படத்தைத் தேர்ந்தெடுப்பதில் எப்போதும் உள்ள வடக்கு தெற்கு பாகுபாடு, விளையாட்டு வீரர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் (பாஸ்கரன் கட்டுரை) இப்போது நுழைந்துவிட்டதைக் காணும் போது மனம் வேதனையில் குமுறுகிறது.
ஆத்துப்பாலம் ஹாலித் நஸீர்

● ''தினத் தந்தியை உயர் வகுப்பினர் படிக்காமலென்ன. ஹிந்து பேப்பருக்கு இடையில் வைத்துக் கொண்டு படிப்பார்கள்'' என மூதறிஞர் ராஜாஜி அவர்கள்குறிப்பிட்டிருந்த கருத்தை 'நியூஸ் ஜூஸ்' பகுதியில் படிக்க நேர்ந்தபோது நம்மிடையே நிலவி வரும் ஹிப்பாகிரஸித் தன்மையை அவர் எவ்வளவு தெளிவாக எடை போட்டிருக்கிறார் என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.
போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● கல்கத்தா லேக் ரோடு பற்றிய செய்தித் துணுக்கு (7–6–81 இதழில்) கண்டோம். லேக் ரோடு ''கவி பாரதி சரணி'' என மாற்றப்பட்டுள்ளது. பெயர் மாற்றத்துக்கு உரிய பெருமை கல்கத்தா தமிழர்கள் அனைவருக்கும் சேர வேண்டியது. ஒருவிலருக்கு மட்டும் அதனை அர்ப்பணிப்பது சரிதானா?
கல்கத்தா டி. கிருஷ்ணன்
துணை செயலாளர் பாரதி தமிழ்ச் சங்கம்

● கவி பாரதி சராணி (சரணி அல்ல) எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டிருக்கும் ''லேக் ரோடு'' சுமார் 1 கி.மீ. நீளமுள்ள சாலையே. 6 கி.மீ. நீளமுள்ளதல்ல.
கல்கத்தா-16 க. கோபாலகிருஷ்ணன்

# வஸந்த்! வஸந்த்!

## 26. "பாஸ்! ஐம் இன் லவ்!"

சென்ற அத்தியாயத்தின் இறுதி நிகழ்ச்சிகளிலிருந்து சற்றுப் பின்நோக்கிப் போகிறோம். அன்று பிற்பகல் வஸந்தை அனுப்பிவிட்டு கணேஷ் ஆபீஸ் அறையில் வீற்றிருந்த போது வாசலில் ஜீப்பின் சிறல் கேட்டதும் உடனே ராஜேந்திரன் அவசரமாக அறைக்குள் நுழைவதைப் பார்த்தான்.

''என்ன ராஜேந்திரன்! நீங்க என்னைத் தேடிண்டா?''

''கணேஷ்! உடனே நாம அந்த உக்கல் கிராமத்துக்குப் போகணும்.''

''நாளைக்குப் போறதா இருக்கேன்.''

''இல்லை. இப்பவே கிளம்புங்க. எங்கே வஸந்த்?''

''வஸந்தை முன்னாலே அனுப்பியிருக்கேன்.''

''தனியாகவா?''

''ஆமாம். ஏன்?''

''ஆபத்து கணேஷ்! அவங்க பார்ட்டி என்ன செய்யறாங்க தெரியுமில்லே?''

''தெரியுமே. நூறு ரூபாய் நோட்டு அடிக்கிறாங்க.''

''அட! நீங்களும் கண்டு பிடிச்சிங்களா? ரொம்பக் காலமா பாச்சா காட்டிக்கிட்டிருக்கிற பார்ட்டி அது. வஸந்தைத் தனியா அனுப்பிச்சு என்ன சாதிக்கிறதா உத்தேசித்திருந்தீங்க?''

''அவங்களைக் காண்டாக்ட் பண்ணி வியாபாரம் பேசறாப்பல பேசி அவங்க ஆபரேஷன்களெல்லாம் எங்கே நடக்கிறதுன்னு கண்டு பிடிக்க.''

''ஒண்டியா அனுப்பிச்சீங்களா. தப்புப் பண்ணிட்டீங்க கணேஷ்! அவங்க கொலைக்கும் அஞ்ச மாட்டாங்க. ஆப்டுட்டார்னு தீர்த்துக் கட்டிடுவாங்க. அதிகம் பேச வேண்டாம். வாங்க போகலாம்.''

''இருங்க. ப்ரொபஸரும் மகளோட கூட வரேன்னாரு. போன் பண்ணிட்டு...''

''போற வழியில ப்ரொபஸரைக் கூட்டிக்கிட்டுப் போகலாம். நீங்க புறப்படுங்கங்கறேன்.''

வஸந்த் சென்று இரண்டு மணி நேரத்துக்குள் கணேஷ் ராஜேந்திரன் பேராசிரியர் இனியா யாவரும் உக்கலை நோக்கி விரைவாகச் சென்று கொண்டிருக்கையில் ராஜேந்திரன் அந்த நோட்டு விவகாரத்தைப் பற்றித் தகவல்கள் தந்தார். ''கள்ள நோட்டுக்களைச் சாதாரணமா, சுலபமா கண்டு பிடிச்சுறலாம். கள்ள நோட்டு அவசரம் உள்ள இடங்களில் அதிகம் சந்தேகப் படாத இடங்களில்தான் செலாவணியாகும். பிஸியா இருக்கிற ஓட்டல், சினிமாக் கொட்டகை இந்த மாதிரி இடங்களில ஒத்தை ஒத்தையா மாத்தணும். அனுபவஸ்தங்க சுலபமாக் கள்ள நோட்டுக்களைக் கண்டுபிடிச்சுருவாங்க. உதாரணமா



பாங்கில வேலே செய்யறவங்க நோட்டுக் கத்தையை நிரடிப் பார்த்துக்கூடத் தெரிஞ்சுக்கிடுவாங்க. சில பேர் தொட்டாக்கூடப் போதும்...''

''இவங்க நோட்டு?''

''இவங்க நோட்டு ரொம்ப ஒஸ்தியான ஜாதி. இந்த மாதிரி முறைகளில கண்டு பிடிக்கவே முடியலே. கள்ள நோட்டுக்கும் நல்ல நோட்டுக்கும் பேப்பர் திக்னஸ், ஃபீல் இங்க் கலர் இதுல எல்லாம் லேசா வித்தியாசம் இருக்கும். ஆனு இவங்க நோட்டுல அந்தக் குறைகள் எதுவுமே இல்லே. ரொம்ப க்ளோஸ். சந்தேகாஸ்பதமான நோட்டுக்கள் சிலது ஆறு மாசத்துக்கு முன்னுல எங்க பார்வைக்கு வந்தது. லாப்ல கொடுத்து யு. வி ல பார்த்ததில லேசா வித்தியாசம் தென்பட்டது. ஆனு உத்திரவாதமா கள்ள நோட்டுன்னும் சொல்ல முடியலே. ரொம்ப நல்ல எக்விப்மெண்ட் வெச்சுக்கிட்டு நல்ல முறையில அச்சடிக்கிருங்கன்னு தோணிச்சு. எந்த ஏரியாவிலேருந்து ஆபரேட் பண்ருங்கன்னு தெரியலே. அந்த அருண் எண்டர்ப்ரைசஸை க்ளோஸா வாட்ச் பண்ணிக்கிட்டுத்தான் இருந்தோம். சந்தேகப்படும் படும்படியா எதும் இல்லே.''

''பின்ன எப்படி இப்ப உறுதியாச் சொல்றீங்க?''

''நீங்க எப்படி உறுதியாச் சொல்றீங்க கணேஷ்?''

''ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையில இருந்து அந்தக் கிணத்துத் தண்ணி...''

''அதே கட்டுரையைப் போலீஸ் பாக்க மாட்டாங்களா? எங்களுக்கும் கொஞ்சம் திறமையைக் கொடுங்க.''

''சேச்சே! உங்களுக்கில்லாத திறமையா? ராஜேந்திரன்! இப்ப வஸந்தை அனுப்பிச்சது முட்டாள்தனம்னு தெளிவாத் தெரியுது. விஷயம் தீவிரமானதுதான்.''

''வஸந்துக்கு என்ன ஆகும்?'' என்ருள் இனியா.

''அடி உதை பட்டுருவானேன்னு பயம்!''

''நல்லா அடிபடட்டும்'' என்ருள் இனியா. அவள் முகத்தில் கோபம் அங்கங்கே சிவப்பாகத் தெரிந்தது.

''ஏன் இனியா?''

''அந்தப் பொண்ணுகூட அவர் கொஞ்சின கொஞ்சலைப் பார்த்தீங்க இல்லே?''

''சேச்சே. அது அவன் விளையாட்டுத்தனமான சுபாவம் இனியா. நான்கூட அதைப் பத்திக் கேட்டேன். என்ன சொன்னுன் தெரியுமா? இனியா?''



கணேஷ், ப்ரொபஸர் அரைத் தூக்கத்தில் இருப்பதைக் கவனித்துவிட்டு, ''உன்னோட உறவுங்கறது காவியம், கவிதை. இது வெறும் பொம்மை பார்க்கறதுதான்னுன்.''

''அப்படியா சொன்னார்?''

பேராசிரியர் எழுந்து, ''உக்கல் வந்தாச்சா?'' என்றார்.

''இல்லே ஸார். இன்னும் இல்லே. தூங்குங்க.''

விழித்துக் கொண்டவர் கணேஷ், ராஜேந்திரன் சம்பாஷணையில் ஏதும் ஆர்வம் காட்டுபவராகத் தெரியவில்லை.

''அழகர் மலைல ஒரு பகுதியில கிடாரிப் பட்டில இருந்து மூணு கல் தொலைவில குகைப் படுகையிலயும் சுனைக்குப் பக்கத்து பாறையிலும் ஒரு பெரிய கல்வெட்டைக் கண்டு பிடிச்சு நான்தான் ட்ரான்ஸ்க்ரைப் பண்ணேன். கணேஷ் அதில ஒரு இடத்தில் 'ஊபு வணிகன் வியகன் கணதிகன்...'''

''ஸார் நாங்க கள்ள நோட்டைப் பத்திப் பேசிக்கிட்டிருக்கோம். நீங்க கல்வெட்டு..''

''அதில காசு இருந்துதான் ஆகணும் கணேஷ்.''

''எதில?''

''ராஜராஜன் கிணத்துல.''

ராஜேந்திரன், ''ஸார்! அதைத் தீர விசாரிச்சுப் பார்த்துட்டோம். ஆர்க்கியாலஜி டிப்பார்ட்மெண்ட்ல. அவங்க ஒரு தடவைக்குப் பத்துத் தடவையா அடிச்சுச் சொல்லிட்டாங்க. அங்க காசு இல்லே. வேற ஏதோ கல்வெட்டில அதெல்லாத்தையும் கிணத்தில இருந்து தூர்த்து எடுத்திட்டாங்கன்னு எழுதியிருக்காம்'' என்றார்.

''அப்படின்னு எந்த மடையன் சொன்னான்?''

''உங்களைப் போல இன்னொரு பேராசிரியர்தான் ஸார்.''

''இத பாருங்க. இப்ப ரெண்டாயிரம் ரூபா பெட்டு கட்டறேன். அந்தக் கிணத்தில... ஒருவேளை கொடுங்காளூர் பக்கத்தில இன்னொரு கிணறு இருக்கு. அதில போட்டிருப்பாங்களோ?''

''அவங்க என்னமோ பண்ணிட்டுப் போகட்டும் ஸார். நமக்கு இப்ப முக்கியம் தங்கக் காசில்ல. வஸந்த்தான்.''

உக்கலுக்கு வந்த கையுடன் பேராசிரியர் தம் மகளுடன் ஒரு டார்ச் விளக்கு, பூதக் கண்ணாடி சகிதம் ரா. ரா. கிணத்தை நோக்கிப் போய்விட்டார்.

''சரியான கம்பனிய்யா அந்த ஆளு! எங்க புடிச்சிங்க?''

''ஆராய்ச்சிக்காரங்களுக்கு அதுக்குமேலே எதிலும் ஆர்வம் கிடையாது.''

ஊரைச் சுற்றி வலம் வந்து விட்டார்கள். வஸந்தின் சுவடுகள் தெரியவில்லை.

''குறிப்பா எங்காவது போகச் சொன்னீங்களா?''

''பஸ் ஸ்டாண்டுப் பக்கத்தில போய் முதல்ல விசாரிக்கச் சொன்னேன்.''

''சரி. அங்கதான் போகலாம் வாங்க.''

பஸ் நிலையத்தில் கொஞ்ச நேரம் திரிந்தார்கள். அந்தப் பெட்டிக் கடைக்காரன் மார்பில் சட்டைப் பித்தான் திறந்து அதில் ஒரு புலி நகம் தொங்கக் காட்டுத்தனமாக கிராப் வைத்துக்கொண்டு அவர்களைப் பக்க வாட்டமாகப் பார்த்தான்.

''இங்க சாயங்காலம் ஒரு ஆள் மீசை வெச்சுக்கிட்டு கன்னத்தில மச்சம் கைல பொட்டியோட வந்தாருங்களா?''

''அப்படி யாரும் இல்லிங்களே.''

சர்பத் பையன் ''அண்ணே அப்படி ஒருத்தர் வந்தாருங்களே. சிகரெட்டு வாங்கிக்கிட்டு உங்ககிட்ட ஏதோ பேசிக்கிட்டிருந்தாருங்களே!'' என்று இழுத்தான்.

''அடப் போடா. அது வேற யாரையோ கேக்கறாங்க அவங்க. அந்த ஆளு இல்லே. அவரு ஏதோ பத்திரிகை வாங்க வந்தாருங்க.''

''என்ன பத்திரிகை?''

''அது வந்து.. அவன் சற்றுத் தயங்கினான்.

''கல்கியாப்பா?''

''இல்லேங்க. இந்த மாதிரிப் பத்திரிகை.'' 'இன்ப மயக்க'த்தைக் காட்டினான்.

''அப்ப வஸந்த்தாங்க - அது! அந்தாளு எந்தப் பக்கம் போனான்?''

''நான் கவனிக்கலேங்க.''

''இங்கதான் வந்திருக்கான் ராஜேந்திரன். இருவரும் நடந்தார்கள். ''எங்க போவான் இங்க இருந்து?'' சற்றுத் தூரத்தில் இருந்த டீக்கடைக்குச் சென்றார்கள். ''டீக்கடையைப் பார்த்தா நிச்சயம் ஒரு டீ அடிப்பான். இங்க விசாரிச்சுப் பாக்கலாம்.''

''ஆமாங்க. பார்த்தா வெளியூர்க்காரர் மாதிரி இருந்ததுங்க. உக்காந்துக்கிட்டு டீ சாப்பிட்டாருங்க. யாருக்கோ காத்துக்கிட்டு இருக்கிற மாதிரி தோணிச்சு. அப்புறம் ஒரு பையன் வந்து கூட்டிக்கிட்டுப் போனாங்க.''

''எந்தப் பக்கம்?''

''மேக்காலேங்க. தெருக் கோடிக்கு...''

டீக்கடைப் பெஞ்சில் ஒரு காகிதம் கிடந்தது. அச்சடித்த புத்தகத்திலிருந்து கிழிக்கப்பட்ட ஒரு பக்கம் அது. அதில்:

சதன் எழுதிய மலபார் தேங்காய்

ஆரம்ப நாட்களில் எனது முதலாளி ராஜாவின் அந்தரங்க வாழ்க்கை எனக்குப் பிடிபடவேயில்லை. போகப் போகத்தான் அவரது சரச சல்லாப லீலைகள் புரிய ஆரம்பித்தன.

கணேஷ் புன்னகையோடு ''அடையாளம் வெச்சுட்டுப் போயிருக்கான் வஸந்த். வாங்க போகலாம்.'' என்றான்.

அந்தத் தெருக் கோடியில் அந்தப் புத்தகத்தின் ஒன்பதாம் பக்கம் கிடந்தது:

அவளது இரண்டுமே பித்தளைப் பானை போல ஜொலித்துக் கொண்டிருந்தது.

இருட்டிக் கொண்டிருக்க, ''சீக்கிரம் சீக்கிரம்'' என்று கணேஷின் உள்ளம் பதறியது. நெல் வயல்களின் ஆரம்பத்தில் பதின் மூன்றும் பக்கம் கிடந்தது.

அவள் பெங்களூர் பாணியில் தாவணி போடாமல் பாவாடை ஜாக்கெட் சகிதமாக இருந்தாள்.

மனைவி: ''உங்க ஆபீஸில்தான் ஏகப்பட்ட ரீபில் பேனா இருக்கே... பின் எதுக்கு கை விசிறி எடுத்துக்கிட்டுப் போறீங்க....?''

கணவன்: ''ரீபில் பேனால் முதுகு சொறிஞ்சுக்க முடியுமா என்ன?''

- உ. ராஜாஜி

> ஊருக்குச் செல்லும் தன் கணவரிடம் மனைவி சொன்னது: "ஏங்க இன்லண்டு லெட்டர், கவர் விலையெல்லாம் ஏறிடுச்சு. எனக்கு ஏதாவது எழுதுவதாக இருந்தால் மணியார்டர் கூப்பனிலே மட்டும் எழுதுங்க."
> - பிரியா பாலு

ஒரு மாந்தோப்பின் பன்னீர் முற்றம் போல இருந்த இடத்தில்:

முழு ஆப்பிள் ஒன்றை அப்படியே விழுங்க முயற்சிப்பவன் போல இருந்தது அவன் செய்கை,

சின்னதாக ஷெட்டு போல இருந்த மறைவான இடத்திற்கு ராஜேந்திரனும் கணேஷும் வந்து சேர, 'அவளோ தன் இரு கண்களையும் அப்படியே மூடிக்கொண்டாள்'.

அப்போதுதான் ஓரத்தில் வான் நின்று கொண்டிருந்ததையும் அதில் சிலர் எதையோ ஏற்றுவதையும் பார்த்தார்கள். ராஜேந்திரன் தம் ரிவால்வரை ஹோல்ஸ்டரிலிருந்து விடுவித்துக் கொண்டார். உள்ளே 'டுப்' என்று சப்தம் கேட்க, "கணேஷ்! க்விக்! பதுங்கிக்கிங்க. மைந்திங் ராங்!" என்றார்.

கணேஷ் பதற்றப்பட்டு ராஜேந்திரன் பின்னால் சென்று பதுங்கி எட்டிப்பார்த்தான்.

உள்ளே மூவர் கீழே கிடந்தவனைச் சுற்றிலும் பெட்ரோல் கொட்டிக் கொண்டிருக்க "அய்யோ! வஸந்த்!" என்று கத்திவிட்டான். உள்ளே உடைத்துக் கொண்டுஓட உள்ளே இருப்பவன் உஷாராகித் தன் கைத்துப்பாக்கியை எடுத்து கணேஷை அவசரமாகக் குறி பார்த்துத் துப்பாக்கியின் குதிரையைத் தட்டிவிட டுமீல் என்று வெடித்தது ராஜேந்திரனின் ரிவால்வர். கையில் ரத்தம் பொங்க அவன் துப்பாக்கி சிதறி விழுந்தது. கணேஷ் அதைப் பற்றிக் கொண்டு "ஆல்ரைட்! எல்லாரும் அப்படியே நில்லுங்க. வெளியே போலீஸ் காத்திருக்குது" என்றான்.

• • •

கே.ஜே. ஆஸ்பத்திரியில் மூன்றாவது மாடிக் கட்டட அறையில் ஜன்னலில் ஏராள மலர்கள் வைத்திருந்தன. கணேஷ் கவலை தோய்ந்த முகத்துடன் அறைக்குள் நுழைந்தான்.

திரை மூடியிருந்தது. "சரியா பத்து நிமிஷந்தான்" என்று நர்ஸின் குரல் கேட்டது.

"வஸந்த்! வஸந்த்!"

வஸந்த் மெல்லக் கண் விழித்தான். "பாஸ் நீங்களா?"

"ஆமாம் வஸந்த்!"

"இது மெட்ராஸ்தானே"

"மெட்ராஸ்தான் வஸந்த்."

"எம படாஸ் எல்லாம் பார்த்தேனே."

"கனவா இருக்கும். எப்படி இருக்கே வஸந்த்?"

"பொழைச்சுட்டேனு? நான்தானே பேசறேன்?"

"நீதான் வஸந்த்! நீதான் வஸந்த்!"

"சரியான சமயத்தில வந்துட்டீங்களே. இல்லேன்னு ஆபீஸ்ல இத்தனை நேரத்துக்குப் படமாத் தொங்கியிருப்பேன் இல்லே?"

"அதிகம் பேசாதே வஸந்த்!"

"எனக்குச் சரியாப் போச்சு பாஸ். டாக்டர் கில்லாடி. குண்டை வெளில எடுத்துட்டார். எனக்கு சின்னதா ஒரு பாட்டில்ல போட்டுப் பரிசாக் கொடுத்திருக்கார். தழும்பைப் 'பாக்கறீங்களா?" வஸந்த் தன் சட்டைப் பித்தானைக் கழற்றி மார்பில் ஆறிக்கொண்டிருந்த தையலைக் காட்டினான். "பத்து செண்டி மீட்டர்!"

"வஸந்த்! ஐம் ஸாரி."

"எதுக்கு ஸாரி? மலபார் தேங்காயைப் பிடிச்சிட்டு வந்தீங்களே! பெரிய ஆள் பாஸ் நீங்க! டிஸ்சார்ஜ் ஆனப்புறம் ஒருமுறை கால்ல விழுணும்!"

"இனியா வந்தாளா?"

வஸந்த் கண்களில் சோகம் ஜரிகை விட்டது.

"வரலையா?"

"வந்தா! அதான் வம்பாப் போச்சு."

"என்ன ஆச்சு?"

"இப்ப உங்களுக்குத் தழும்பு காட்டலே? அதே மாதிரி அந்த ஸெப்ரி பொண்ணு வந்திருந்தபோது அவளுக்குக் காட்டினேன்."

"அந்தச் சமயத்தில வந்துட்டாளா?"

"அப்ப வந்திருந்தாப் பரவாயில்லையே! இதே மாதிரி தழும்பு தனக்கும் இருக்கிறதா அந்தப் பொண்ணு சொல்லிச்சு. 'எங்கே காட்டு! பார்த்தா எனக்குக் கொஞ்சம் சீக்கிரம் குணமாகும்'னு சொன்னேன். அவ காட்டுச்சு. அந்தச் சமயம் பார்த்தா இனியா வந்து தொலைக்கணும்! கொஞ்சம் அசந்தர்ப்பமாப் போயிடுத்து...."

கணேஷ் சிரிப்பை அடக்கிக் கொண்டான்.

"சிரிக்காதீங்க பாஸ். இனியா 'எல்லாம் கான்ஸல்'னுட்டா; என் முகத்திலே முழிக்க மாட்டேன்னுட்டா. பெண்களே மோசம் பாஸ். கேவலம் தழும்பைப் பார்த்தா தப்பா? வள்ளுவர் சொன்ன மாதிரி..."

"வஸந்த் இப்ப வள்ளுவர் வேண்டாம் ரெஸ்ட் எடுத்துக்க!"

"பேராசிரியர் என்ன சொல்றார்?"

"போன் பண்ணார். இன்னும் ஏதோ புதுசா கல்வெட்டு ஆராய்ச்சி பண்ணினதில தஞ்சாவூர் ஜில்லாவில பொதுப்படையிற கிராமத்தில இன்னொரு கிணறு இருக்காம்...."

"சரிதான். என்ன சொன்னீங்க?"

"ராங் நம்பர்னு வெச்சுட்டேன். ஒரு கிணறு ஏற்படுத்திய குழப்பம் போதாதா?"

"நோட்டு அடிக்கிறவங்களையெல்லாம் புடிச்சாச்சா?"

"எல்லாரையும் புடிச்சாச்சு. ராஜேந்திரன் உனக்கு அவார்டு கொடுக்கக் காத்திருக்கிறார்."

"அவார்டு உங்களுக்குத்தான்."

வஸந்த் திடீர் என்று பிரகாசமானான்.

"பாஸ்! கீழே ஒரு ரிஸப்ஷனிஸ்ட் இருக்கா. போறப்போ கவனிங்க. இங்கம் டீடெய்ல்ஸ் குறிச்சுக்கிறதுக்காக வந்திருந்தா. அந்த க்ஷணமே எனக்கு டெம்பரேச்சர் ஏறிப் போயி... பாஸ் ஐம் இன் லவ்!"

"சரிதான்! இனி எனக்குக் கவலையில்லே. உனக்கு உடம்பு சரியாப் போச்சுன்னு அர்த்தம்! நான் வரேன்."

கணேஷ் தன் தலையை இடம் வலமாக அசைத்துக்கொண்டே ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தான். (முற்றும்)





# “கமல் வந்திருக்கிறார்!”

ஞாயிற்றுக் கிழமை காலை பதினொரு மணி. தியாகராயநகர் ஹிந்திப் பிரசார சபா தெரு. களத்தூர் கண்ணம்மா காலத்தில் கமலஹாஸன் வசித்த ஒரு பெரிய வீட்டுக்கு அவரை அழைத்துச் சென்றேன். கமல் உள்ளே நுழையவும் அதே வயதுடைய ஓர் இளைஞர் வெளியே வரவும் சரியாக இருந்தது. கமலைப் பார்த்த அந்த இளைஞர் ஒரு கணம் ஆச்சரியத்தால் ஸ்தம்பித்து நின்றுவிட்டுப் பிறகு பரபரப்புடன் வரவேற்றார்.

''உங்களை எங்கோ பார்த்தமாதிரி முதலில் தோன்றியது. பின்னர்தான் கமலஹாசன் என அறிவில் உதயமாயிற்று'' என்று கூறிய படியே உள்ளே நுழைந்தவர், ''கமலஹாசன் வந்திருக்கிறார்'' என்று பலமுறை சத்தம் போட்டுச் சொல்லியும் யாருமே லட்சியம் பண்ணவில்லை. முதலில் அசட்டையாக இருந் தவர்களுக்குப் பிறகு மெய்யாலுமே கமலைப் பார்த்ததும் ஒரே வியப்பு.

அன்று பதினொரு மணி டீ.வி. படம் கோகிலா. கமலஹாசன் நடித்தது. ''கமல ஹாசன் வந்திருக்கிறார்'' எனக் கூப்பிட்ட போது, 'டீ.வி.யில் கமல் தோன்றுகிறார்; படம் ஆரம்பமாகிவிட்டது' என்பதைத் தான் சொல்கிறானாக்கும் என்று இருந்து விட்டார்களாம்!

அந்த வீட்டின் ஒரு போர்ஷனில்தான் அன்று கமல் தன் பெற்றோருடன் வசித்து வந்தார். ஆனால் இப்போது அந்த வீட்டில் கமலுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட் டது போல்தானிருந்தது. யோசனையாக இருந்தார். ''என்ன பலமான சிந்தனை?'' என்று கேட்டபோது, ''மனத் திரையில் ஸ்லோ மோஷனில் அந்தக் காலப் படம் ஓடுகிறது'' என மெல்லக் கூறினார்.

அவருக்குப் பல சம்பவங்களை நினைவுக்குக் கொண்டுவர உதவியவர் உடன் வந்த மன்னி. (சாருஹாசனின் மனைவி). ''கமல் இங்கே வா! இந்த அறை வாசல் கதவு முன்பு இங்கே இருக்கலையே. நாம குளிக்கிறதுக்கு வெளி வழியாகத்தானே போகணும்? ஞாபகம் இருக்கா? இப்ப இங்கேயே கதவு வந்துடுத்து....'' என்றிப்படி மாறுதல்களைக் கூற, கமலும் மன்னி சொல்வதைப்பார்த்து, கேட்டு, தலை அசைவால் ஆமோதித்துக் கொண்டிருந்தார்.

அந்த வீட்டு மாமி கமல் சிறுவனாயிருந்த போது அடித்த லூட்டிகளை அடுக்க ஆரம் பித்தார். ''ஓர் இடத்தில் உட்காரமாட் டாரே! ஒரே துள்ளலும் குதியும்தான். எதிர் போர்ஷன்லே ஒரு பெரியவர் தினமும் பூஜை செய்வார். 'நானும் பூஜை பண் றேன்'னு கமலும் ஆரம்பித்துவிடுவான். அவர் எப்படி பூஜை செய்கிறாரோ அதே போல இவன் நடித்து மந்திரங்கள் தெரி யாததால் ஏதேதோ உளறிக் குளறுவான்! எங்களுக்கெல்லாம் ஒரே சிரிப்பாயிருக்கும்!'' இதைக் கேட்டு கமல் இப்போது சிரித்தார்.

- மனத்திரையில் ஸ்லோமோஷனில் பழைய நினைவுகள்
- தரையில் உட்காரச் செய்து சாதம் பிசைந்து கையில் வைத்துச் சாப்பிடச் சொல்வார் அண்ணி.
- ஓடிப்பிடித்து விளையாடிய பால்ய நண்பர்கள்



''ஆமா, கமல், உங்களுக்கு ஞாபகம் இருக்கா? 'அழுகையை முழுங்கு, அழுகையை முழுங்கு'ன்னு உங்கம்மா சொல்வாங்களே'' என்று மாமி கூறியவுடன் கமல் கண்கள் கலங்கி விட்டன. அவர் தமது இறந்த தாயாரை நினைத்திருக்க வேண்டும். சில விநாடிகளுக்குள்ளாகவே அழுகையை முழுங்கிச் சமாளித்துக் கொண்டார்.

''ஒரு வேடிக்கை தெரியுமா? இப்பக்கூட நான் என்னை அறியாமல் அதே வார்த்தைகளைப் பிறரிடம் சமயம் நேரும்போது சொல்கிறேன்'' என்றார் கமல். பிறகு வீட்டைச் சுற்றிப் பார்த்தபடியே ''இங்குதான் என் தாயார் என்னைக் கீழே உட்கார வைத்துக் கையில் சாதம் போட்டுச் சாப்பிடச் சொல்வார். நான் அடம் பிடிப்பேன். தாயார் விடமாட்டார். நான் அழுதாலும் சமாதானப் படுத்தி ஆயிரம் சொல்லி என்னைச் சாப்பிட வைத்துவிடுவார்'' என்றார்.

குளியல் அறைக்குள் சென்று பார்த்தார் கமல். ''இங்கே என் அம்மா எத்தனை நாள் எனக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டிவிட்டிருக்கிறாள்!''





''எத்தனை நாள் எனக்கு இங்கே என் அம்மா எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி விருக்கிறாள்!''

குரூப் ஃபோட்டோ: ஏழு வயதுச் சிறுமியைக் கமல் வற்புறுத்தி அழைத்து வந்து தம் அருகில் நிற்க வைத்துக்கொண்டார்...

அவர்கள் வீட்டு ஏழு வயதுப் பெண் குழந்தை கமலின் ரசிகையாம். ஆனால் கமலின் அருகே வரவே பயப்பட்டாள். கமலே சென்று நல்ல வார்த்தை சொல்லி அழைத்து வந்தார். சற்று பயம் தெளிந்தது. ஆனால் பேசவே யில்லை. கமலுடன் வாசற் பக்கம் வந்தேன். ''சவன், அன்று இங்குதான் நாங்கள் மூவரும் ஓடிப் பிடித்து விளையாடுவோம். ஒரு கார் இருக்கும். அந்தக் காரின் டாப் மீது நான் ஏறிக்கொண்டுவிடுவேன். இருவரும் என்னைப் பிடிக்கப் படாத பாடு படுவார்கள்! எவ்வளவு ஆனந்தமான நாட்கள்!'' அவரை அறியாமல் பெருமூச்சு.

''எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து படம் எடுத்துக்கொள்வோம்'' என்று வீட்டிலுள்ளவர்கள் விரும்பிக் கேட்க, 'சரி' என்றார் கமல். ஆனால் அந்த ஏழு வயதுப் பெண் குரூப்பில் நிற்க மறுத்து விட்டாள். கமல் அவளை வற்புறுத்தி அழைத்து வந்து தம் அருகில் நிற்க வைத்துக் கொண்டார்.

காரில் திரும்பி வரும்போது, ''அந்த ஏழு வயதுப் பெண்ணின் இருதயத் துடிப்பு எப்படி இருந்தது தெரியுமா!'' என்றார். ''எதிர்பாராத விதமாய் என்னைச் சந்தித்ததால் அப்படி ஒரு பரபரப்பு; அதன் விளைவே அந்த இதயத் துடிப்பு! எல்லோருக்கும் இருக்கக் கூடியதுதானே! சிறுமிக்கு இருக்காதா என்ன?''

பேட்டி: ''சவன்''

படங்கள்: ஏ.வி. பாஸ்கர்



## 2

“குட்மார்னிங், மேடம்!'' என்றான் வந்தவன்.

''வெரி குட்மார்னிங்!''

''ஐயாம் கமல்நாத்... பிஸினஸ்மேன்... விஷ் டு மீட் மிஸ்டர் மகேஷ்''

''கம் இன்!'' — பின்னுக்கு நகர்ந்தாள்.

அவரை உள்ளே அனுமதித்து 'க்ளக்' என்று கதவு மூடிக் கொண்டது. ''திஸ் வே... பாலோ மீ...'' வழி காட்டிக் கொண்டு முன்னே நடந்தாள்.

மகேஷ் இப்போது ஒரு சிகரெட்டைப் பற்றவைத்து, தீக்குச்சியை அணைத்துக்கூடைக்குள் போட்டுவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான்.

முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். அவசரமாக மேஜை மீது போட்டிருந்த கால்களை உருவி, எழுந்து நின்று புருவங்களை நெர்த்தான்.

ஓ, மஞ்சு சொன்ன மாதிரி ஆள், கருப்பாய், குள்ளமாய், மீசை வைத்துக்கொண்டு, ஜுங்கி கட்டிக் கொண்டு... ஓ...!

தேனும் அறிமுகப்படுத்தினாள் நீலா. ''மீட் மிஸ்டர் கமல்நாத்... பிஸினஸ்மேன்...''

''ஹலோ!'' — கையை நீட்டினான் மகேஷ்.

கமல்நாத் பதிலுக்குக் கை கொடுக்கவில்லை. மேஜைக்கு மறுபுறம் நாற்காலியில் சாவகாசமாக உட்கார்ந்து கொண்டு இரு கைகளையும் கூப்பி, ''வணக்கங்க'' என்றார்.

மீண்டும் திடுக்கிட்டான். கூப்பிய கைகள் ஒன்றில், மின்னிய மோதிரத்தில் மஞ்சு சொன்ன மாதிரியே 'கே' என்ற நீல எழுத்து.

''வணக்கம்.''

கமல் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். டெலிபோன் சமயம் பார்த்துக் கூப்பிட்டது. ''ஜஸ்ட் எ மினிட்'' — மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ரிஸீவரை எடுத்தான்.

''மகேஷ் அண்ட் நடேஷ் கம்பெனி?'' என்றது ஒரு புதுக் குரல். பெண் குரல்.

''எஸ்—''



''மிஸ்டர் மகேஷ் இருக்காரா? ரொம்ப அவசரம்.''

''மகேஷ்தான் பேசறேன்.''

''தாங்க்ஸ் டு காட்... மிஸ்டர் மகேஷ்... ஏன் எதுக்குன்னு கேக்காதீங்க, உங்களை எச்சரிக்க விரும்பறேன்.''

''என்ன சொல்றீங்க?''

''இப்போ உங்க எதிரிலே ஒரு மீசைக்காரன் வந்து உட்கார்ந்திருக்கானு?''

''ஆமாம்.''

''அவனை நம்பாதீங்க.''

''அப்படியா?''

''ஆமா. அவன் ஒரு கொலைகாரன்... ஒரு கொலைத் திட்டத்தோடுதான் இப்ப உங்களிடம் வந்திருக்கிறான்...''

''ஐ ஸீ...''

''அவன் தன் மனைவியை இன்று இரவு கொலை செய்துவிடப் போகிறான்.''

''அப்படியா?''

''மிஸ்டர்,என்ன கேலியா கேக்கறீங்க... நான் விளையாடவில்லை.உன்னை எச்சரிக்கவே விரும்புகிறேன்.பெரிய ஆபத்தில் மாட்டிக் கொள்ளப் போகிறாய்...கொலைக் குற்றம் உன் தலையிலே விழுந்துவிடப்போகிறது.''

''மே ஐ நோ யுவர் நேம் அண்ட் ப்ளீஸ்?'' அட்ரஸ்.

''நாட் நெஸஸரி'' என்றான் கடுமையாக. ''உன் நலன் கருதும் ஒரு ஆள். — அது போதும்.''

''தாங்க்ஸ்.''

''அவன் சொல்கிற விஷயத்துக்கு நீ ஒப்புக் கொண்டால் உன்னைவிடப் பெரிய மடையன் இருக்க மாட்டான். எச்சரித்துவிட்டேன். இனி உன் பாடு.'' 'டக்' கென்று எதிர் முனையில் ரிசீவரை வைத்தான்.

# நீயா?

## சந்திரநாத்

வியர்த்தது. துடைத்துக் கொண்டான். கமல்நாத்தைப் பார்த்தான். அவர் சாவகாசமாக மேஜையின் மீது கிடந்த பத்திரிகையில் ஆழ்ந்திருந்தார்.

சொல்லுங்க ஸார்—''

கமல்நாத் எழுந்து சென்று அந்த அறையின் கண்ணாடிக் கதவை இழுத்துச் சாத்திவிட்டு வந்து உட்கார்ந்தார்.

''ரொம்ப ஸீக்ரெட்டான விஷயங்க. நம்ப ரெண்டு பேர் தவிர வேறு யாருக்கும் தெரியப்படாதுங்க.''

''தெரியாது.''

''நான் மதுரைக்குப் போறேன். இரண்டு நாள்ல திரும்பிடுவேன். ஆனா நான் போயிட்டு வரப்போறது ஒரு சிங்கத்தோட குகைக்குள்ள போயிட்டு வர்ற மாதிரி. நான் பத்திரமாப் போயிட்டுப் பத்திரமாத் திரும்பிடணும். அந்தப் பத்திரத்துக்கு நீங்க கேக்கற பீஸ் குடுத்திடறேன்.''

''நீங்க என்ன பிஸினஸ் பண்ணிக்கிட்டிருக்கீங்க?''

''என்னங்க... நம்பளைத் தெரியாதுங்களா? நம்ப பேரு 'பிலிம் லைன்லே' நல்லா தெரிஞ்ச பேரு ஆச்சங்களே.''

''ஓ. சினிமா ப்ரொட்யூஸரா?''

''இன்னும் அவ்வளவுக்கு ஆகலீங்க.'' சிரித்தார் கமல். ''இப்ப சில படங்களை வாங்கி டிஸ்ட்ரிபியூட் பண்ணிக்கிட்டு இருக்கேனுங்க.''

''எங்கே இருக்கிறது உங்க ஆபீசு?''

''ஆர். ஏ. புரத்திலேங்க. ஆபீசு, வீடு எல்லாம் ஒண்ணுதாங்க...தனி பங்களாங்க... ரொம்ப 'காமா' இருக்குங்க... ஆளை வெட்டிப் போட்டாக்கூட கேக்க நாதி இருக்காதுங்க.'' சிரித்தார் கமல்.

திடுக்கிட்டான். 'ஆளை வெட்டிப் போட்டாக்கூட!'

''எனக்கு சத்தம், கூச்சல் எல்லாம் அலர்ஜிங்க... அதனாலதான் அந்த மாதிரி இடத்தைப் பிடிச்சேனுங்க.... நீங்கதான் இன்னி ராத்திரி நம்ப வூட்டுக்கு வரப் போறீங்களே—நீங்களே பார்த்துக்குங்களேன்—''

மகேஷ் மீண்டும் திடுக்கிட்டான். 'கறுப்பாக, குள்ளமாக, ஒருத்தன் வருவான். உங்களைக் கூட்டிக்கிட்டுப் போவான்.' — மஞ்சுவின் வார்த்தைகள் மெய்யாகின்றனவா?

''சரி, நான் என்ன செய்யணும்கிறீங்க?... நீங்க மதுரைக்குப் போயிருக்கிறபோது நான் உங்க வீட்டிலே இருக்கணுமா?''

---

சென்ற வருடம் உலகக் குழந்தைகள் ஆண்டு. இந்த ஆண்டு உடல் ஊனமுற்றவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. 'ஆமாம்! இளைஞர்களுக்குச் சிறப்பளிக்கும் ஆண்டே கிடையாதா?' என்ற இளைஞர்களுடைய முணுமுணுப்புக்குப் பதிலளிக்கும் வகையில் ஐக்கிய நாடுகள் சபை 1985-ம் வருடத்தை உலக இளைஞர்கள் ஆண்டாக அறிவித்திருக்கிறது. -தி. இரவிசங்கர்




''இல்லீங்க... மதுரைக்கு நாம ரெண்டு பேருமேதான் போகப் போகிறோம். அதுக்கு முன்னாலே ஒரு காரியம் இருக்கு... ஒரு பெரிய தொகை பாங்க்லேர்ந்து டிரா பண்ணிக் கொண்டாந்து வீட்டில வைக்கப் போறேன். நமக்கு நாளைக் காலையிலதான் வண்டி. இராத்திரி முழுக்க நீங்க என் கூட இருக்கணும்.''

''அவ்வளவுதானே?''

''காலைல ஒரு சின்னப் போக்குக் காட்டணுங்க. நாலு நாலரைக்குக் கிளம்பிப் போறதாப் போக்குக் காட்டிப்புட்டு, வீட்டுக்கே போயிருங்க. பொறவு டிரஸ் மாத்திக்கிட்டு நேரே ஸ்டேஷனுக்கு வந்துடுங்க.''

''சரி.''

''நான் தனியா வந்து ஸ்டேஷன்ல பார்த்துக்குவேன். எதிரெதிர் சீட்டு ரிசர்வ் பண்ணச் சொல்லிடறேன்.''

''நீங்க பண்ணினா உங்க எதிரிகளுக்குத் தெரிஞ்சுடாதா?''

''தனித் தனி ஆளு விட்டுப் பண்ணச் சொல்றேன்... சரியுங்களா... பேசாம வந்து எதிர் சீட்லே குந்திக்கினு கடலைக்காய் கொறிச்சுக்கினு... யாரோ மாதிரி இருந்து, மதுரையில இறங்கிடுங்க—''

''ரயில்லே ஏதாவது ஆகும்னு எதிர்பார்க்கிறீங்களா?''

''மதுரை வரை ஒண்ணும் பயமில்லீங்க.''

''நீங்க யாருக்காவது பயப்படறீங்களா?''

''பிஸினஸ்லே எனக்குப் போட்டி ஆளுங்க சிலபேரு இருக்கிறாங்க... விரோதியா நினைக்கிறாங்க... அவங்க ஏதாவது செஞ்சு போட்டா?''

''மதுரையில் என்ன வேலையாப் போறீங்க?''

''அதை மட்டும் தயவு செஞ்சு கேட்காதீங்க. நான் போறது வர்றது எல்லாம் என் சொந்த விஷயம். அதை யார் கிட்டயும் நான் சொல்ல முடியாது.''

''மதுரையில் உங்களுக்கு ஏதாவது ஆபத்து ஏற்படும் என்று நினைக்கிறீங்களா?''

''எப்படிங்க சொல்ல முடியும்? அநேகமா ஒண்ணும் ஏற்படாதுன்னுதான் நினைக்கிறேன். பெரும்பாலும் எல்லாம் சுமுகமாகவே முடியும். நாம அங்கே ஒரு ஹோட்டல்லேதான் தங்கப் போறோம். அதுவும் நாளை இரவு மட்டும்தான்.''

மகேஷ், சப்ஜெக்டை விட்டு விட்டு, திடீரென்று ஒரு கேள்வி கேட்டான். ''இங்கே உங்க வீட்டில உங்களைத் தவிர இன்னும் யார் யார் இருக்காங்க?''

கமல் திடுக்கிட்ட மாதிரி பார்த்தார். ''எதுக்குக் கேட்கறீங்க?''

''சும்மா, தெரிஞ்சுக்கத்தான்.''

''ஒரு செக்ரட்டரி, ஒரு 'குக்' இரண்டே பேருதான். 'குக்'கூட இரண்டு நாளா ஊர்ல இல்லே. யாருக்கோ உடம்பு சரியில்லேன்னு போயிருக்கான்.''

''உங்களுக்கு எத்தனை குழந்தைங்க?''

''குழந்தையா? எனக்கு இன்னும் கலியாணமே ஆகலேங்க'' என்று சிரித்தார் கமல்நாத். மகேஷ் அவநம்பிக்கையுடன் அவரைப் பார்த்தான். 'பொய் சொல்றியா? இன்னிக்கு ராத்திரி உம் பொஞ்சாதியை நீ

ஞுளோஸ் பண்ணப் போகிறதா டெலிபோன்லே அந்தப் பெண் சொன்னுளே–'

கமல் சொன்னர், ''ஒரு காலத்துலே–அதோ நிக்குதே, உங்க செகரட்டரிப் பொண்ணு.. அது மாதிரி பொண்ணு ஒருத்தி மேலே உசிரையே வைச்சிருந்தேன். ஆண்டவன் அவளை எனக்குத் தர மறுத்துவிட்டார். மூணு நாள் ஜுரத்துலே அவ போயிட்டா... அப்புறம் பொம்பளை ஆசையே விட்டுப் போயிடுச்சு...'' அவர் குரல் கரகரத்தது.

''அது கிடக்குங்க... விட்டுத் தள்ளுங்க'' என்ருர். ''எனக்கு டைம் இல்லே. போயி ரிசர்வ் பண்ணச் சொல்லணும்... என்ன வரீங்களா, என் கூட?''

பணத்தேவையை நினைத்துக் கொண்டான். ''வர்றேன்'' என்ருன். 'முட்டாளே, ஒப்புக் கொண்டு விட்டாயா?' என்று அதட்டுவது போல டெலிபோன் உடனே கூப்பிட்டது. அதே பெண். ''மகேஷ்,–அந்த ஆள் போயிட்டாரு?''

''இல்லே–''

''இப்பவும் அங்கேதான் இருக்காரு?''

''ஆமாம்.''

''பெயர் என்னன்னு சொன்னுன்? கமல் நாத்ன்னுதானே?''

''ஆமாம்.''

''அதுவே ஒரு பொய். அது அவன் பெயரே இல்லே. அவன் ஒரு 'ஸ்மக்ளர்'. பம்பாயில் சுதர்ஸன் என்ற பெயரோட சுத்தினவன்!''

''ஐ ஸீ–''

''அவன் இன்றிரவு உங்களை அவன் வீட்டுக்குக் கூப்பிட்டிருக்காரு?''

''ஆமாம்.''

''போகாதே. இன்னி ராத்திரிதான் அங்கே ஒரு கொலை நடக்கப் போறது. அங்கம் அங்கமாக ஒரு பெண்ணை வெட்டி, டிரங்கிலே போட்டு, கூவத்துலே போட்டு விட்டு, உன்னோட ரயில் ஏறப் போருன். போலீஸ் விசாரணைன்னு வரும்போது உன்னுடன் அவன் மதுரையிலே இருந்ததா சாட்சி சொல்ல வேண்டி வரும்.''

''நீ யார்?'' – அதட்டினுன்.

''நானு?'' – சிரித்தாள். ''உண்மை விளம்பி – போருதா?'' டக்கென்று ரிஸீவரை வைத்து விட்டாள்.

மகேஷ் தீர்மானமான முகத்துடன் திரும்பினுன். ''கமல் ஸார், ஐ அக்ரீ டு எஸ்கார்ட் யூ–'' என்ருன்.

''ரொம்ப சந்தோஷமுங்க.'' – கமல்நாத் கைப் பையைத் திறந்து ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் கொடுத்தார். ''அட்வான்ஸா வச்சுக்கிடுங்க. போய்ட்டு வந்ததும் பாக்கியைத் தந்துடறேனுங்க.''

''தாங்க்ஸ்'' – நோட்டுக்களை உள் பாக்கெட்டில் பத்திரப்படுத்திக் கொண்டான்.

''ஒரு முக்கியமான விஷயமுங்க. ஒரு ஆள் நேத்துலேர்ந்து என்னைப் பின்தொடர்ந்துக் கிட்டிருக்கிற மாதிரி ஒரு பிரமைங்க. அதனுலே நீங்க எங்க வீட்டுக்கு வேறே ஏதாவது வேஷத்துலே வாங்க.''

''அப்படியே செஞ்சுட்டாப் போச்சு.''

''ஒரு தியேட்டர் ஓனர், இல்லாட்டா ப்ரொட்யூஸர் மாதிரி வாங்களேன். தாடி



மானேஜர்: ஆபீஸ் நேரத்தில் கதைகள் எழுதிய அனுப்பு கிறீராமே?

கிளார்க்: கிடையவே கிடையாது! ஜோக்குகள் எழுதி அனுப்பவே எனக்கு நேரம் போதலே. கதைகள் எழுத எப்படி நேரம் கிடைக்கும்?

-ஏ. கே. சங்கர்

---

வச்சுக்கிட்டு வந்தால் தெரியாது.''

''மதுரையிலே நான் என்ன பண்ணணும்?''

''ஒன்றும் பண்ண வேண்டாங்க. சும்மா ஹோட்டல் பாண்டியன்லே நல்லா டிபன் சாப்பிட்டுட்டு, மீனுட்சியம்மன் கோயில்லாம் சுத்திட்டு வாங்க... பாக்கி எல்லாம் நான் பார்த்துக்கிறேன்.''

''எங்கே தங்கறோம்?''

''ஹோட்டல் நிர்மலா தானுங்க. ஸ்டேஷன் எதிர்த்தாப்பலே இருக்குது. ரூம் கூடப் போட்டிருப்பாங்க, ரெடியா...''– எழுந்தார். ''கரெக்டா அஞ்சு மணிக்கு வந்துடுங்க''–

''ஓ எஸ்'' என்ருன் மகேஷ்.

ஹாலைக் கடக்கும்போது நீலாவைத் தேடினுர். அதே ஜன்னலடியில், நின்று வெளியே கீழே பார்த்துக் கொண்டிருந்தாள்.

கமல்நாத் நின்று, ''உங்க செகரடரியா?'' என்ருர்.

''எஸ்.''

''ரொம்ப அழகாக இருக்காங்களே. ஆனு அழகாக இருக்கிற வங்களுக்குத்தான் ஆபத்தும் அதிகம். போன வருசம் பாருங்க... நம்ப பிரண்ட் ஒருத்தர் – அவர் பிலிம் டிஸ்ட்ரிபியூட்டர்தான். ஒரு அழகான செக்ரட்டரி வச்சிருந்தாரு. பிஸினஸ் விஷயமா வந்த ஒரு பையன், நம்ப பிரெண்ட் வெளியே போயிருந்தப்ப – அவ வாயிலே துணியை அடைச்சு அவளை 'ரேப்' பண்ணி...''

''கடவுளே–''

''அதோட போச்சா? அவ கழுத்தையும் நெரிச்சுப் போட்டுட்டுப் ' போயிட்டான். அப்படி இருக்குது, உலகம்... நீ ஜாக்கிரதையா இரும்மா.''

நீலா நடுங்கினுள்.

மகேஷ் சிரித்தான். ''எங்க நீலா நல்ல ப்ரேவ் கேர்ள். அவகிட்ட ஒரு பயல் வாலாட்ட முடியாது'' என்ருன்.

''இல்லிங்க. இம்மாம் பெரிய ஆபீசுலே தனியா இருக்காங்களேன்னு சொன்னேன்'' என்ற கமல் ''வரேம்மா'' என்று இறங்கிச் சென்ருர்.

(தொடரும்)



○ போப் சுடப்பட்டவுடன்...

# போப்பாண்டவருக்கு

**ப**ச்சை நிறகவுன்கள் அணிந்த சர்ஜன்கள் ஐந்தரை மணி நேரம் பாடுபட்டார்கள், அவரைக் காப்பாற்ற. அவர்கள் நெற்றியில் துளிர்த்த வியர்வையை அடிக்கடி நர்ஸ்கள் ஒற்றி எடுக்க வேண்டியிருந்தது. — அப்படி ஒரு கவலை. எனினும் அமைதியாகச் செயலாற்றினார்கள். போப் ஜான் பாலின் உயிரைப் பறிக்கும் முயற்சி தோல்வியுற்றது: ஆனால் அவர் வயிற்றில் பட்ட காயங்கள் மிகவும் ஆபத்தானவைதான்.

ஆம்புலன்ஸில் போப் வந்து சேர்ந்தபோது ஆஸ்பத்திரியின் எமர்ஜென்ஸி அறையில் டியூட்டியிலிருந்தவர், இதய சஸ்திரசிகிச்சை நிபுணர் டாக்டர் ஃபிராங்கோ விட்டெரியோ. ஏகப்பட்ட இரத்தம் இழந்து கொண்டிருந்தார் புனித போப். ''உடனடியாக அவரை ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டு சென்றோம்'' என்கிறார் விட்டெரியோ. நல்ல வேளையாக ஆப்பரேஷன் தியேட்டர் சித்தமாய் இருந்தது. அங்கு ஓர் இருபது வயது வாலிபருக்குச் சிறுநீரக மாற்று ஆபரேஷன் நடத்த எல்லாம் தயாராக இருந்தது. அந்த ஆபரேஷனுக்கு அவசரமில்லை. கொஞ்சம் ஒத்திப்போடுவதால் நோயாளிக்கு ஆபத்தில்லை.

போப்பாண்டவருக்கு இறுதிப் பிரார்த்தனைச் சடங்கு நடந்தது — ஒருவேளை மரணம் சம்பவிக்கலாம் என்பதால். அடுத்த ஓரிரு விநாடிகளில் டாக்டர் குழுவின் தலைவர் ஃபிரான்ஸெஸ்கோ க்ருஸிட்டி புனித போப்பின் வயிற்றைக் கத்தியால் கீறினார். நெஞ்சின் அடிவாரத்திலிருந்து வயிற்றின் அடிப்பாகம் வரை பெரிய கீறல்! — 18 அங்குல நீளம்.

முதலில் காயங்களிலிருந்து ரத்தம் பெருகுவதைநிறுத்தியாக வேண்டும். வயிற்றில் நாலரை பைண்ட் ரத்தம் தேங்கிக் கிடப்பதைப் பார்த்து டாக்டர்கள் அதிர்ச்சியுற்றனர். இது உடலின் மொத்த ரத்தத்தில் 40 சதம்! இதனைப் பஞ்சாலும் உறிஞ்சியாலும் நீக்கினர். ரத்த நாளத்தில் மாற்று ரத்தம் ஏற்றினர். ஆறு பைண்ட் ரத்தம் ஆபரேஷனின்போது செலுத்தப்பட்டது.

நல்லவேளை, வயிற்றின் இடப் பாகத்தில் புகுந்த தோட்டா முதுகின் கீழ்ப்பாகம் வழியே வெளியேறிய போதிலும் உடலின் பிரதான சுத்த ரத்த நாளமான அயோர்ட்டாவைப் பாதிக்கவில்லை. பிரதான அசுத்த ரத்த நாளமான வீன காவாவையும் தாக்கவில்லை. மேலும் முதுகெலும்பு, கல்லீரல், கணையம், பான்கிரியாஸ், இவை மீதும் படவில்லை. இது கிறிஸ்தவ உலகின் பேரதிர்ஷ்டம்.

இருந்தாலும் சர்ஜன்களின் பணி சிக்கலானது. வயிற்றினுள்ளே மலம் சிதறியிருந்தது. அது பெருங்குடலைத் தோட்டா துளைத்திருப்பதைச் சுட்டியது. 20 முதல் 25 அடிவரை நீளமுள்ள சிறு குடலையும் பெருங்குடலையும் சர்ஜன்கள் ஆராய்ந்தனர். இதற்கிடையில் வயிற்றுப் பாகம் முழுதும் ஆன்டிபயாடிக் கலந்த உப்பு நீரால் கழுவப்பட்டது. கிருமிகளையும் கழிவுப் பொருள்களையும் நீக்க இந்த ஏற்பாடு.

பெருங் குடலில் ஒரு பெரிய துளையும் சிறு குடலில் பல காயங்களும் இருப்பதை சர்ஜன்கள் கண்டனர். சில சிறு துளைகளைத் தைத்தனர். சிறு குடலின் ஓரிடம் ரொம்பவும் பாழாகிவிட்டிருந்தது. அந்த இடத்தை வெட்டி எடுத்து எறிந்துவிட்டு, வெட்டப்பட்ட இருமுனைகளையும் ஒன்று சேர்த்துத் தைத்தனர்.

பெருங்குடலிலும் மிகவும் நாசமாகியிருந்த ஒரு பகுதியை வெட்டி எடுத்து எறிந்துவிட்டு வெட்டப்பட்ட இரு முனைகளையும் இணைத்துத் தைத்தனர். இந்த ரணம் ஆறுவதற்கு ஆறு வாரம் ஆகும். பெருங்குடல் ரணம் சுலபத்தில் ஆறாது. அதுவரை அந்தப் பக்கம் மலம் செல்லாதிருப்பது நல்லது. எனவே அந்த இடத்துக்கு மேல் மட்டத்தில்

பெருங்குடலை வெட்டி இரு முனைகளையும் வயிற்றுக்கு வெளியே வைத்துத் தைத்து விட்டனர். கீழ் முனையை 'ஸீல்' வைத்தது போல் மூடிவிட்டனர். மேல் முனையுடன் ஒரு பிளாஸ்டிக் பை இணைக்கப்பட்டது. மலம் அதில் வடிந்துவிடும்.

ஆறேழு வாரங்களில் இன்னொரு ஆபரேஷன் நடக்கும். அதற்குள் கீழ்ப் பகுதி நன்கு ஆறியிருக்கும். இந்த ஆபரேஷனின் போது மேல் மட்டத்தில் துண்டிக்கப்பட்ட பெருங் குடலின் இரு முனைகளையும் பழைய படி இணைத்துத் தைத்துவிடுவார்கள். அந்தக் காயமும் சில நாட்களில் ஆறிவிடும். அதன் பிறகு இயல்பான மலப் போக்கு இருக்கும்.

ஆபரேஷனில் பங்கேற்ற டாக்டர்கள், நர்ஸ்கள், டெக்னீஷியன்கள் மொத்தம் முப்பது பேர்!

டாக்டர் ரோன்கோனி வயிற்றுக் கீரலுக்குத் தையல் போட்ட பிறகு போப்பின் வலது கையிலும் இடது கைவிரல்களிலும் பட்ட புல்லெட் காயங்கள் கவனத்துக்குள்ளாயின. எலும்பு முறிவு ஏற்பட்டிருந்த விரலுக்குக் கட்டுப் போடப்பட்டது.

அறுபத்தோரு வயதான போப்பாண்டவர், குடிப்பதில்லை, சிகரெட் பிடிப்பதுமில்லை. பனிச் சறுக்கல், நீச்சல், வேகமான நடை பயிலல் போன்ற தேகப் பயிற்சிகள் அவரைத் திடகாத்திரராக வைத்திருந்தன. எனவே இந்த ஆபத்தை வெற்றி கொண்டு பூரண ஆரோக்கியத்தைத் திரும்பப் பெறுவார் என்று டாக்டர்கள் நம்பிக்கையோடு இருக்கின்றனர்.

நன்றி: நியூஸ் வீக்

தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்

# ஆபரேஷன்





# தமிழ் வளர்த்த ஷெல்லிதாசன்!

பாரதியார் தமிழால் புகழ் பெற்றார். தமிழுக்கும் புகழ் தேடினார். அவர் தோன்றியில்லையானால், இருபதாம் நூற்றாண்டில் நாம் காணும் கவிதை நடையோ, உரை நடையோ தமிழில் தோன்றியிருக்க முடியாது. பாரதி இல்லையானால் இன்று நாம் காணும் வாழ்வு தமிழ் மொழிக்கு இல்லை. ஆங்கில மொழி அங்கு இங்கு எனாதபடி தமிழகத்திலே எங்கெங்கும் ஆதிக்கம் பெற்றபோது அதனைப் பொறுத்துக்கொள்ள இயலாமல் தமிழ்த் தாய் சீற்றத்தால் சிரித்தாள். அந்தச் சிரிப்பிலிருந்து பிறந்தான் பாரதி!

பாரதி பல நூற்றுக் கணக்கில் பாடல்களைப் படைத்தளித்தான். அவற்றிலே தமிழ் மொழியைப் பற்றியவை நான்கே பாடல்கள். தமிழ்ச் சாதியைப் பற்றி ஒரே பாடல்! தமிழ் நாட்டைப் பற்றி ஒரே பாடல். இந்த ஆறு பாடல்களால் மகா கவி தமிழர் நெஞ்சங்களிலே நிலையான இடத்தைப்பிடித்துவிட்டான். தமிழைப் பற்றிய பாடல்கள், 'தமிழ்' 'தமிழ்த் தாய்' – தமிழ் மொழி வாழ்த்து' – 'வாழிய செந்தமிழ்' என்னும் தலைப்புக்களைப் பெற்றுள்ளன. தமிழ் நாட்டைப் பற்றிய பாடல், 'செந்தமிழ் நாடு' என்னும் தலைப்பைப் பெற்றுள்ளது. தமிழ் இனத்தைப் பற்றிய பாடல், 'தமிழ்ச் சாதி' என்னும் தலைப்பைப் பெற்றுள்ளது. இந்த ஆறு பாடல்களே தமிழர் அந்த மகா கவிக்கு எழுப்பியுள்ள புகழ் என்னும் மாளிகையின் அடித்தளமாகும்.

தன் தாய்மொழியான தமிழ் மொழி உலக மொழிகளிலே சிறந்த மொழி என்பதிலே அவனுக்கு நம்பிக்கை இருந்தது. அதனால், 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்' என்று பாடினான். இன்னும் ஒரு படி மேலே போய், 'யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை' என்றும் பாடினான். தமிழன் விடுவானா? இது வெறும் டூப் என்று சொல்லி விடுவானே என்று அஞ்சியவன்போல, 'உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை' என்று அடித்துக் கூறினான்.

சிறந்த ஒன்றை எடுத்துச் சொல்லும்போது மிகையாகப் புகழலாம்; அதிலே தவறில்லை. அது 'உயர்வு நவிற்சி' என்று அணி இலக்கணம் சொல்லுகிறது. பாரதி தமிழைப் பற்றியும், தமிழ்ப் புலவர்களைப் பற்றியும் கூறியது உயர்வு நவிற்சியன்று; உண்மைச் செய்தி! அதனாற்றான் சத்தியஞ் செய்து சொன்னான்.

உரை நடைக் கட்டுரையொன்றிலே 'தமிழ் வளர்ந்தால் தருமம் வளரும்' என்கிறான் பாரதி. 'தமிழ்' என்னும் பாடலின் இறுதியிலே,

''தெள்ளுற்ற தமிழமுதின்
சுவை கண்டார், இங்கமரர்
சிறப்புக் கண்டார்''

என்றும் பாடுகிறான்.

''எங்கும் தமிழ்; எதிலுந் தமிழ்'' என்று யான் இன்று சொல்லிக் கொண்டிருக்கிறேனே அதற்கு அடியெடுத்துக் கொடுத்தவன் பாரதி தான். அந்த அடி, தமிழ் வளர்ந்தால் தருமம் வளரும் என்பதாகும். அந்த நிலை தமிழ் நாட்டில் ஏற்பட்டால் தமிழராகிய நாம் எல்லாம் அமரர்களாவோம். தமிழ் நாடு தேவலோகமாகும். இந்த நம்பிக்கையோடு தான் ''எல்லோரும் அமர நிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகுக்கு அளிக்கும்'' என்றான் பாரதி. வள்ளற் பெருமானும் 'இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுவோம்' என்று பாடினார். 'வானகமிங்கு வந்திட வேண்டும்' என்பதும் பாரதி வாக்கு.

பாரதியார், ஆங்கில மொழியை வெறுக்கவில்லை. ஆங்கில மகா கவியான ஷெல்லியின் இலக்கியங்களைப் படித்து, அதிலே கவர்ச்சியுற்று, ''ஷெல்லி தாசன்'' என்று புனை பெயர் பூண்டானென்றால், ஆங்கிலத்திலே 'பொன் வால் நரி' என்னும் சிறுகதையொன்றை எழுதினான் என்றால், அவனுக்கு எப்படி அந்த மொழியின் மீது துவேஷம் இருக்க முடியும்? ஆங்கில மொழியின்மீது அவனுக்கு வெறுப்பில்லை என்றாலும், அம்மொழி தமிழர் வாழ்விலே எங்கும் எதிலும் ஆதிக்கம் பெற்றிருப்பதை வெறுத்தான். தமிழர் வாழ்விலே தருமம் தழைக்கவேண்டுமானால் தமிழர் தங்களுக்குள்ளேயே – தங்கள் குடும்பத்தாருடனேயே–ஆங்கிலத்தில் பேசும் வழக்கத்தை விட்டுவிட வேண்டும் என்று சொன்னான். உரைநடைக் கட்டுரையொன்றிலே அவன் சொல்லுகிறான்:

''இங்கிலீஷ் படித்த வக்கீல்களும், இங்கிலீஷ் பள்ளிக்கூடத்து வாத்தியார்களும் தமது நீதி ஸ்தலங்களையும் பள்ளிக்கூடங்களையும் விட்டு வெளியேறினவுடனே இங்கிலீஷ் பேச்சை விட்டுத் தாம் தமிழரென்பதை அறிந்து நடக்க வேண்டும். எங்கும் எப்போதும் இந்தப் பண்டிதர்கள் இங்கிலீஷ் பேசும் வழக்கத்தை நிறுத்தினால் உடனே தேசம் மாறுதலடையும். கூடிய வரை இவர்கள் தமிழெழுதக் கற்கவேண்டும். தமிழ் புத்தகம் பத்திரிகை வாங்கிப் படிக்க வேண்டும்.

(மயிலை இலக்கிய வட்டம், பாரதீய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

REGISTERED No. M.
Registered as a Newspaper in

# கொஞ்சும் அழகி, கோகுல் குமரி!

கோடைக்குகந்த,
தூய சந்தனத்தில் தயாரான
ஒரே உன்னத தயாரிப்பு

## கோகுல்

ஸான்டால் &
ஸாண்டல்வுட்
பவுடர்கள்



தயாரிப்பாளர்கள்:
டி.எஸ்.ஆர். & கம்பெனி,
மதராஸ்.

IS 3959
ISI
CM/L NO 8223




ADWAVE TSR/1630